𑌪𑌿𑌤𑌾𑌹𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋 𑌮𑌾𑌤𑌾 𑌧𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃।
𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑍋𑌂𑌕𑌾𑌰 𑌋𑌕𑍍𑌸𑌾𑌮 𑌯𑌜𑍁𑌰𑍇𑌵 𑌚॥

பிதாஹமஸ்யஜகதோ மாதாதாதாபிதாமஹ:,
வேத்யம்பவித்ரமோங்கார ருக்ஸாமயஜுரேவச. (௧௭)

இந்த லோகத்துக்குத் தகப்பனும் நானே, தாயும் நானே, ஸ்ருஷ்டி கர்த்தாவும் நானே, பாட்டனும் நானே, பரிசுத்தவஸ்துவும் நானே, ஓங்காரமும் நானே, ருக் ஸாம யஜுர்வேதங்களும் நானே. (௧௭)

𑌗𑌤𑌿𑌰𑍍𑌭𑌰𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌶𑌰𑌣𑌂 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌬𑍀𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥

கதிர்பர்த்தாப்ரபுஸ்ஸாக்ஷீ நிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்,
ப்ரபவஃப்ரளயஸ்தாநம் நிதாநம்பீஜமவ்யயம். (௧௮)

ஆசிரயிக்கவேண்டிய இடம் நான், தரிப்பவன் நான், பரிபாலிப்பவன் நான், பார்க்கிறவன் (ப்ரத்யக்ஷீகரிப்பவன்) நான், வாசஸ்தானம் நான், ஶரணம் (ரக்ஷகன்) நான், மித்ரன்நான், உத்பத்தியும், லயமும், ஸ்த்திதியும், நிதானமும் விகாரமில்லாத வித்தும் நானே. (௧௮)

𑌤𑌪𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑌹𑌂 𑌵𑌰𑍍𑌷𑌂 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌚।
𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌸𑌦𑌸𑌚𑍍𑌚𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨॥

தபாம்யஹமஹம்வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமிச,
அம்ருதஞ்சைவம்ருத்யுச்ச ஸதஸச்சாஹமர்ஜுந. (௧௯)

அர்ஜுநா! (நானே அக்நி சூரியாதி தேஜோரூபமாய்) தாபம் உண்டாகும்படி செய்கிறேன், நானே மழையைத் தடுக்கிறேன், நானே மழை பெய்விக்கிறேன், நானே அம்ருதம், நானே ம்ருத்யு, ஸத்வஸ்துவும் நான், அஸத்வஸ்துவும் (லோகாதீதமானவஸ்துவும்) நான். (௨௰)

𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌾𑌂𑌸𑍋𑌮𑌪𑌾𑌃 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾
𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇।
𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕
𑌮𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍॥

த்ரைவித்யாமாம்ஸோமபா:பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வாஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே, தேபுண்யமாஸாத்யஸுரேந்த்ரலோக மஶ்நந்திதிவ்யாந்திவிதேவபோகாந். (௨௦)

ருக் யஜுஸ் ஸாம வேதங்களை யறிந்தவர்கள், யஜ்ஞங்களால் என்னை யாராதித்து, ஸோமபானம்செய்து, பாவத்தைப்போக்கடித்துக்கொண்டு ஸ்வர்க்கப்ராப்தியை விரும்புகிறார்கள். அவர்கள், புண்யபலமான இந்த்ரலோகத்தை ஆஶ்ரயித்து, அவ்விடத்தில் திவ்யமான தேவபோகங்களை அநுபவிக்கிறார்கள். (௨௦)

𑌤𑍇𑌤𑌂𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂𑌵𑌿𑌶𑌾𑌲𑌂
𑌕𑍍𑌷𑍀𑌣𑍇𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿।
𑌏𑌵𑌂𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾
𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾𑌲𑌭𑌨𑍍𑌤𑍇॥

தேதம்புக்த்வாஸ்வர்கலோகம்விசாலம்
க்ஷீணேபுண்யேமர்த்யலோகம்விஶந்தி,
எவம்த்ரயீதர்மமநுப்ரபந்நா
கதாகதம்காமகாமாலபந்தே. (உக)

அவர்கள், விசாலமான அந்த ஸ்வர்க்கலோகத்தை (மஹாசுகத்தை) அநுபவித்து, புண்யம் க்ஷீணித்தபிறகு மநுஷ்யலோகத்தில் ப்ரவேசிக்கிறார்கள். இப்படிவேதோக்த யஜ்ஞாதிகர்மங்களை அநுஸரித்து, போகங்களை விரும்புகிறவர்களுக்கு, கதாகதங்கள் (ஜனனமரணங்கள்) சம்பவிக்கின்றன. (உக)

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌵𑌹𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍॥

அநந்யாஶ்சிந்தயந்தோமாம் யேஜநா:பர்யுபாஸதே,
தேஷாம்நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம்வஹாம்யஹம்(உஉ)

ப்ரயோஜநாந்தரத்தை நினைக்காமல் என்னையே த்யானித்துக்கொண்டு உபாஸிக்கிறவர்கள் எவர்களோ, என்னிடத்தில் நித்யஸம்பந்தத்தை விரும்பின அவர்களுக்கு என் ப்ராப்தியென்கிறபோகத்தையும் புநர்ஜன்ம நிவ்ருத்தியென்கிற க்ஷேமத்தையும் நானேவஹிக்கிறேன் (கொடுக்கிறேன்.)

𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃।
𑌤𑍇𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍॥

யேப்யந்யதேவதாபக்தா யஜந்தேஶ்ரத்தயாந்விதா:,
தேபிமாமேவகௌந்தேயயஜந்த்யவிதிபூர்வகம். (உங)

கௌந்தேயா! இதர தேவதைகளிடத்தில் பக்தி யுண்டாகி, சிரத்தையோடு, பூஜிக்கிறவர்கள் எவர்களோ, அவர்களும் என்னையே பூஜிக்கிறார்கள். ஆனால், அது விதிபூர்வக மல்ல, (வேதாந்தவிதி தாத்பர்யத்தை அவர்கள் அறியவில்லை.) (உ௩)

ஃயஂஹிஸவ-௰யஜ்ஞா நாஂ ஜொக்தா வ ஹ ஹ ௰யெவ ௪।
ந த ௰ஓாஂஹிஜா நஂதி தெவ நா தஸ்வ ஂதிெத॥

அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம் போக்தாசப்ரபுரேவச,
நதுமாமபிஜாநந்தி தத்வேநாதஸ்ச்யவந்திதே. (உ௪)

யஜ்ஞங்களெல்லாவற்றுக்கும் ஆராத்யனும், பலதாதாவும், நானே, (காம்ய கர்ம நிஷ்ட்டர்கள்) என்னை உண்மையாய் அறியமாட்டார்கள். ஆகையாலேயே, அவர்களுக்கு ப்ரம்ஶமுண்டாகும், (புனர்ஜன்மமுண்டாகும்.) (உ௪)

𑌯𑌾𑌂𑌤𑌿 𑌦𑍇𑌵𑌵𑍍𑌰𑌤𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍 𑌯𑌾𑌂𑌤𑌿 𑌪𑌿𑌤𑍃𑌵𑍍𑌰𑌤𑌾𑌃।
𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌾𑌂𑌤𑌿 𑌭𑍂𑌤𑍇𑌜𑍍𑌯𑌾 𑌯𑌾𑌂𑌤𑌿 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑌿𑌨𑍋𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍍॥

யாந்திதேவவ்ரதாந்தேவாந் பித்ரூந்யாந்தி பித்ருவ்ரதாஃ,
பூதாநியாந்தி பூதேஜ்யா யாந்திமத்யாஜிநோபிமாம். (உரு)

தேவதைகளை பூஜிக்க விரும்பிப் பூஜித்தவர்கள் அவர்களைச்சேர்வார்கள், யக்ஷராக்ஷஸபிஶாசாதி பூதங்களை விரும்பிப் பூஜிப்பவர்கள் அவர்களைச் சேர்வார்கள், என்னைப் பூஜிக்க விரும்பிப்பூஜிக்கிறவர்கள் என்னைச்சேர்வார்கள். ()

𑌪𑌤𑍍𑌰𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍋𑌯𑌂 𑌯𑍋 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿।
𑌤𑌦𑌹𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

பத்ரம்புஷ்பம் பலந்தோயம் யோமேபக்த்யாப்ரயச்சதி,
ததஹம்பக்த்யுபஹ்ருத மச்நாமிப்ரயதாத்மநஃ. (உசு)

ஒரு பத்ரத்தையாகிலும், ஒரு பூவையாகிலும், ஒரு பழத்தையாகிலும், நீரையாகிலும், பக்தியோடு எவன்எனக்குக் கொடுக்கிறானோ, அந்தப் பரிசுத்தமனமுள்ளவனுடைய பக்தியால் ஸமர்ப்பிதமான அந்தவஸ்துவை நான்புஜித்துக் கொண்டிருக்கிறேன். (உசு)

𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍।
𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌮𑍍॥

யத்கரோஷியதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத்,
யத்தபஸ்யஸிகௌந்தேய தத்குருஷ்வமதர்ப்பணம். (உஎ)

கௌந்தேயா! நீ செய்வது எதுவோ, தின்பது எதுவோ, ஹோமம் செய்வது எதுவோ, தானம்செய்வது எதுவோ, தவம்செய்வது எதுவோ, அவைகளெல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்யக்கடவாய். (உஎ)

𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌰𑍇𑌵𑌂𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃।
𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌮𑌾𑌮𑍁𑌪𑍈𑌷𑍍𑌯𑌸𑌿॥

சுபாசுப பலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தநைஃ,
ஸந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோமாமுபைஷ்யஸி. (உஅ)

இப்படி, ஸன்யாஸயோகத்தில் ஸ்த்திரமான மனமுள்ள வனாய் நன்மை தீமைகள் என்கிற பலங்களைக் கொடுக்கத் தகுந்த புண்யபாபரூபங்களான ப்ராசீனகர்மங்களால்விடப் படுவாய், விடப்பட்டபிறகு என்னை, ஆசிரயிப்பாய். (உஅ)

𑌸𑌮𑍋𑌽𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨𑌮𑍇𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿𑌨𑌪𑍍𑌰𑌿𑌯𑌃।
𑌯𑍇𑌭𑌜𑌨𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑌾𑌂𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌯𑌿𑌤𑍇𑌤𑍇𑌷𑍁𑌚𑌾𑌪𑍍𑌯𑌹𑌮𑍍॥

ஸமோஹம் ஸர்வபூதேஷுநமேத்வேஷ்யோஸ்திநப்ரியঃ,
யேபஜந்தி துமாம்பக்த்யா மயிதேதேஷுசாப்யஹம். (உக)

நான் சர்வபூதங்களிலும் பேதமில்லாமலிருக்கிறவன், எனக்குத்வேஷிக்கத்தகுந்தவன் இல்லை. ப்ரீதிசெய்யத் தகுந்தவன் இல்லை, பக்தியோடு என்னை பஜிக்கிறவர் யாரோ, அவர்கள் என்னிடத்திலிருக்கிறார்கள், நான் அவர்களிடத்தில் இருக்கிறேன். (௨௯)

கபிசெத்ஸுராசாரொ ஹஜதெஜாஜநநூஹாக்।
ஸாயுரெவஸஜேவ்ய ஸ்ஸூவ்யவஸிதொஹிஸஃ॥

அபிசேத்ஸுதுராசாரோ பஜதேமாமநந்யபாக்,
ஸாதுரேவஸமந்தவ்யஸ்ஸம்யக்வ்யவஸிதோஹிஸஃ. (௩௦)

இதர ப்ரயோஜனத்தை நினையாமல் என்னை பஜிக்கிறவன் ஆசார ஹீனனா யிருந்தாலும், அவனைச் சாதுவென்றே நினைக்கவேண்டும், அவனுடைய மனோநிச்சயம் நன்றாயிருக்கின்றதல்லவா? (௩௦)

𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿।
𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌨 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿॥

*க்ஷிப்ரம்பவதிதர்மாத்மா ஶஶ்வச்சந்திம்நிகச்சதி,*
*கௌந்தேயப்ரதிஜாநீஹி நமேபக்தஃப்ரணஶ்யதி.* (௩௧)

அப்படிப்பட்டவன், சீக்ரமாய் ஸதாசார நிஷ்ட்டனுவான். எப்பொழுதும் சாந்தியையடைந்திருப்பான், கௌந்தேயா! என் பக்தர்கள் நசிக்கமாட்டார்கள். இந்த விஷயத்தில் நீயும் ப்ரதிஜ்ஞை செய்யலாம். (௩௧)

𑌮𑌾𑌂 𑌹𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌽𑌪𑌿 𑌸𑍍𑌯𑍁𑌃 𑌪𑌾𑌪𑌯𑍋𑌨𑌯𑌃।
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌵𑍈𑌶𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌪𑌿 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍॥

*மாம்ஹிபார்த்தவ்யபாஶ்ரித்யயேபிஸ்யுஃபாபயோநயஃ,*
*ஸ்த்ரியோவைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தேபியாந்திபராங்கதிம்.* ()

பார்த்தனே! ஸ்த்ரீகள், வைசியர்கள், சூத்ரர்கள், பாப யோனியில் பிறந்தவர்களானாலும், அவர்களுள் என்னை நம்பியிருப்பவர்யாரோ, அவர்கள்பரமபதத்தைச்சேர்வார்கள்.

கிம்புநர்ப்ராஹ்மணா:புண்யா ப⁴க்தா ராஜர்ஷயஸ்ததா²।
அநித்யமஸுக²ம் லோகமிமம் ப்ராப்ய ப⁴ஜஸ்வ மாம்॥

கிம்புநர்ப்ராஹ்மணாஃபுண்யாபக்தாராஜர்ஷயஸ்ததா,
அநித்யமஸுகம்லோக மிமம்ப்ராப்யபஜஸ்வமாம். (௩௩)

புண்ய ஜன்மமுள்ள பிராம்மணர்களும், ராஜரிஷிகளும் பக்தியுள்ளவர்களாய், என்னை ஆசிரயிப்பதற்குச் சொல்ல வேண்டுமா? ஆகையால், அநித்யமாய், அஸுகமாயிருக்கிற இந்தலோகத்தை யடைந்திருக்கிற நீ என்னை பஜிப்பாயாக.

மந்மநா ப⁴வ மத்³ப⁴க்தோ மத்³யாஜீ மாம் நமஸ்குரு।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:॥

மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு,
மாமேவைஷ்யஸியுக்த்வைவ மாத்மாநம் மத்பராயண:. (௩௪)

என்னிடத்தில் மனமுள்ளவனாயிரு, என்னிடத்தில் பக்தியுள்ளவனாயிரு, என்னைப்பூஜித்துக்கொண்டிரு, என்னை நமஸ்கரித்துக்கொண்டிரு, இப்படி என்னையே முக்ய கதியாய்நம்பி, மனத்தை என்னிடத்தில் நிறுத்தின பிறகு என்னையே அடையக்கடவாய். (௩௪)

ஸ்ரீகீதாஸு ராஜவித்தியா ராஜகுஹ்ய யோகமென்கிற

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.



பத்தாவது அத்தியாயம்.

# விபூதி யோகம்.



ஸ்ரீ கிருஷ்ண வாக்கியம்.

𑌭𑍂𑌯𑌏𑌵𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌶𑍃𑌣𑍁𑌮𑍇𑌪𑌰𑌮𑌂𑌵𑌚𑌃।
𑌯𑌤𑍍𑌤𑍇𑌹𑌂𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿𑌹𑌿𑌤𑌕𑌾𑌮𑍍𑌯𑌯𑌾॥

பூயஏவமஹாபாஹோ ஶ்ருணுமேபரமம்வச:,
யத்தேஹம்ப்ரீயமாணாய வக்ஷ்யாமிஹிதகாம்யய. (க)

ஓ மஹாபாஹோ! இந்த விஷயத்தில் பிரீதி யுள்ளவனு யிருக்கிற உன்பொருட்டு ஹிதத்தை விரும்பி, மறுபடியும், சிறந்த ஒரு சொல்லை நான் சொல்லுகிறேன், கேட்பாயாக.

𑌨 𑌮𑍇 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌸𑍁𑌰𑌗𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 𑌨 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 ।
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌰𑍍𑌹𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ॥

நமேவிதுஸ்ஸுரகணாஃப்ரபவம்நமஹர்ஷயஃ,
அஹமாதிர்ஹிதேவாநாம் மஹர்ஷீணாஞ்சஸர்வசஃ. (உ)

என்பிரபாவத்தை தேவதைகளாகிலும், மஹரிஷிகளாகிலும் அறியமாட்டார்கள். தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் எல்லா விஷயங்களிலும் நான் முதன்மையானவனல்லவா? (உ)

𑌯𑍋 𑌮𑌾𑌮𑌜𑌮𑌨𑌾𑌦𑌿𑌂 𑌚 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌅𑌸𑌂𑌮𑍂𑌢𑌃 𑌸 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍈𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

யோமாமஜமநாதிஞ்சவேத்திலோகமஹேச்வரம்,
அஸம்மூடஸ்ஸமர்த்யேஷு ஸர்வபாபைஃப்ரமுச்யதே. (௩)

அனாதிகாலமாக ஜனனமில்லாமல் ஸர்வலோகங்களுக்கும் பரமேஸ்வரனான என்னை, மனிதர்களில் எவன்ப்ரமமில்லாமல் அறிகிறானோ, அவன் எல்லாப்பாபங்களாலும் விடப்படுகிறான். (௩)

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾𑌸𑌤𑍍𑌯𑌂𑌦𑌮𑌶𑍍𑌶𑌮𑌃।
𑌸𑍁𑌖𑌂𑌦𑍁𑌃𑌖𑌂𑌭𑌵𑍋𑌭𑌾𑌵𑍋 𑌭𑌯𑌂𑌚𑌾𑌭𑌯𑌮𑍇𑌵𑌚॥

புத்திர்ஜ்ஞாநமஸம்மோஹஃக்ஷமாஸத்யந்தமஶ்ஶமஃ,
ஸுகந்துஃகம்பவோபாவோ பயஞ்சாபயமேவச. (௪)

புத்தி, ஜ்ஞானம், மோஹமில்லாதிருத்தல், பொறுமை, சத்தியம், தமம், சமம், ஸுகம், துக்கம், சந்தோஷித்திருத்தல், கெடுதல், பயம், நிர்ப்பயம். (௪)

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾𑌸𑌮𑌤𑌾𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌤𑌪𑍋𑌦𑌾𑌨𑌂𑌯𑌶𑍋𑌯𑌶𑌃।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿𑌭𑌾𑌵𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌤𑍍𑌤𑌏𑌵𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌾𑌃॥

அஹிம்ஸாஸமதாதுஷ்டி ஸ்தபோதாநம்யஶோயஶ꞉,
பவந்திபாவாபூதாநாம்மத்த ஏவப்ருதக்விதா꞉. (௫)

அஹிம்ஸை, ஸமத்வம், சந்தோஷம், தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி, இப்படிப்பட்ட வெவ்வேறு விதங்களான மனோபாவங்கள், பிராணிகளுக்கு என்னாலேயே உண்டாகின்றன. (௫)

𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌸𑍍𑌸𑌪𑍍𑌤𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑍋𑌮𑌨𑌵𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌮𑌾𑌨𑌸𑌾𑌜𑌾𑌤𑌾 𑌯𑍇𑌷𑌾𑌂𑌲𑍋𑌕𑌇𑌮𑌾𑌃𑌪𑍍𑌰𑌜𑌾𑌃॥

மஹர்ஷயஸ்ஸப்தபூர்வே சத்வாரோமநவஸ்ததா,
மத்பாவாமாநஸாஜாதா ஏஷாம்லோக இமா꞉ப்ரஜா꞉. (௬)

பூர்வம், பிரம்மாவின் மனத்தில் பிறந்த ஸப்த மஹரிஷிகளும், அப்படியே ஸாவர்ணி முதலிய நான்கு மநுக்களும், என் அபிப்பிராயத்தை அநுஸரித்தே, லோகத்தில் இந்த பிரஜைகளை சிருஷ்டித்தார்கள். (௬)

𑌏𑌤𑌾𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌮𑌮 𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃।
𑌸𑍋𑌽𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃॥

எதாம்விபூதிம்யோகஞ்ச மமயோவேத்திதத்வதஃ,
ஸோவிகம்பேநயோகேநயுஜ்யதேநாத்ரஸம்சயஃ. (எ)

என்னுடைய இந்த ஐசுவரியத்தையும், கல்யாணகுண சம்பந்தத்தையும் எவன் உண்மையாய்த்தெரிந்து கொள்ளுகிறானோ, அவன் த்ருடமான பக்தியோகத்தோடு என்னைச் சேர்வதற்குச் சந்தேஹமில்லை. (எ)

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌬𑍁𑌧𑌾 𑌭𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃॥

அஹம்ஸர்வஸ்யப்ரபவோ மத்தஸ்ஸர்வம்ப்ரவர்த்ததே,
இதிமத்வாபஜந்தேமாம் புதாபாவஸமந்விதாஃ. (அ)

நான் எல்லாவற்றுக்கும் உற்பத்திகாரணம், என்னுலேயே எல்லாம் நடக்கின்றது என்று அறிந்து, பாவத்தோடு கூடினவர்களாய், (என்னிடத்தில் விருப்பமுள்ளவர்களாய்) ஜ்ஞானிகள் என்னை பஜிக்கிருர்கள். (அ)

𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍।
𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚॥

மச்சித்தாமத்கதப்ராணு போதயந்தஃபரஸ்பரம்,
கதயந்தஶ்சமாம்நித்யம் துஷ்யந்திசரமந்திச. (கூ)

என்பக்தர்கள் என்னிடத்திலேயே மனம் லயித்தவர்களாய், என்னிடத்திலேயே பிராணத்தை வைத்தவர்களாய் பரஸ்பரம் (என்னை) தெரிவித்துக்கொண்டு, சொல்லிக்கொண்டு, எப்பொழுதும் திருப்தி யடைகிருர்கள், ஆனந்திக்கிருர்கள். (கூ)

𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍।
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇॥

தேஷாம்ஸததயுக்தாநாம் பஜதாம்ப்ரீதிபூர்வகம்,
ததாமிபுத்தியோகந்தம் யேநமாமுபயாந்திதே. (௧௦)

எப்பொழுதும் யோகம் செய்துகொண்டு பஜித்துக் கொண்டிருப்பவர்களுக்கு, என்னை யடைவதற்கு உபாய மாகிய ஜ்ஞானயோகத்தை, நானே பிரீதிபூர்வகமாய்க்கொடுக்கிறேன். (௧௦)

𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌤𑌮𑌃।
𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑍇𑌨 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑌾॥

தேஷாமேவாநுகம்பார்த்த மஹமஞ்ஞாநஜந்தமஃ,
நாசயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேநபாஸ்வதா. (௧௧)

அவர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு, நான் அவர்களுடைய மனோபாவங்களுக்கு விஷயமாய், (காணப்பட்டு) பிரகாசமான ஜ்ஞானமென்கிற தீபத்தினால் அஜ்ஞானத்தாலுண்டாகிற அந்தகாரத்தை (விஷயா பேக்ஷையை) விலக்குகிறேன். (கக)

அர்ஜ்ஜுன வாக்கியம்.

𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑌰𑌂𑌧𑌾𑌮 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂𑌪𑌰𑌮𑌂𑌭𑌵𑌾𑌨𑍍।
𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂𑌦𑌿𑌵𑍍𑌯 𑌮𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌮𑌜𑌂𑌵𑌿𑌭𑍁𑌮𑍍॥
𑌆𑌹𑍁𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑍃𑌷𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑌿𑌰𑍍𑌨𑌾𑌰𑌦𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌅𑌸𑌿𑌤𑍋𑌦𑍇𑌵𑌲𑍋𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂𑌚𑍈𑌵𑌬𑍍𑌰𑌵𑍀𑌷𑌿𑌮𑍇॥

பரம்ப்ரம்ஹபரந்தாம பவித்ரம்பரமம்பவாந்,
புருஷம்சாஸ்வதந்திவ்யமாதி தேவமஜம்விபும். (கஉ)

ஆஹுஸ்த்வாம்ருஷயஸ்ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா,
அஸிதோதேவலோவ்யாஸஸ் ஸ்வயஞ்சைவப்ரவீஷிமே. (௧௩)

நீ பரபிரம்மம், சிறந்த ஒளி, எல்லாவற்றினும் சிறந்த பவித்ரம், நித்யனாய், அப்ராக்ருதனாய், ஆதிகாரணமாய், நித்யாநந்தரூபனாய், பரிணாமமில்லாதவனாய், ஸர்வ வ்யாபியாயிருக்கிற புருஷனென்று உன்னை, தேவரிஷியாகிய நாரதரும், அஸிதனென்கிற தேவல மஹரிஷியும், வியாசமகரிஷியும், மற்றமகரிஷிகளெல்லாரும் சொல்லுகிறார்கள். நீயும் ஸ்வயமாகவே யெனக்குச் சொல்லுகிறாய். (௧௨-௧௩)

𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌦𑍃𑌤𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌯𑌨𑍍𑌮𑌾𑌂 𑌵𑌦𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵।
𑌨 𑌹𑌿 𑌤𑍇 𑌭𑌗𑌵𑌨𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾 𑌨 𑌦𑌾𑌨𑌵𑌾𑌃॥

சர்வமேதத்ருதம்மந்யே யந்மாம்வதஸிகேசவ,
நஹிதேபகவந்வ்யக்திம் விதுர்தேவாநதாநவாঃ. (௧௪)

கேஶவா! நீ யெனக்குச் சொன்னவை யாவும் சத்திய மென்றே நினைக்கிறேன். உன் ஸ்வரூபத்தை தேவாசுரர் களும் அறியமாட்டார்கள். (கச)

𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌥𑌤𑍍𑌵𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮।
𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌭𑍂𑌤𑍇𑌶 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑍇॥

ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்தத்வம்புருஷோத்தம,
பூதபாவநபூதேச தேவதேவஜகத்பதே. (கரு)

புருஷோத்தமா! ஸர்வ பூதங்களையும் ஸ்ருஷ்டிப்பவனே! ஸர்வ பூதங்களையும் நியமிப்பவனே! தேவதேவனே! ஜகத்பதீ! உன் ஸ்வரூபத்தை, உன்னுடைய அஸாதாரண ஜ்ஞானத்தால் நீயே அறிகிறாய். (கரு)

𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌭𑍂𑌤𑌯𑌃।
𑌯𑌾𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌲𑍋𑌕𑌾 𑌨𑌿𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌸𑌿॥

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யாஹ்யாத்மவிபூதய:,
யாபிர்விபூதிபிர்லோகாநிமாம் ஸ்த்வம்வ்யாப்யதிஷ்டஸி. (கசு)

எந்த மகிமைகளால் இந்த லோகங்களெல்லாவற்றையும் நீ வியாபித்திருக்கிறாயோ, அந்த அப்ராக்ருதங்களான உன் மகிமைகளை முழுதும் சொல்லுவதற்கு நீயே தகுந்தவனாயிருக்கிறாய். (கசு)

கயம்வித்யாமஹம்யோகிந் த்வாம்ஸதாபரிசிந்தயந்।
கேஷுகேஷுசபாவேஷு சிந்த்யோஸிபகவந்மயா॥

கதம்வித்யாமஹம்யோகிந் த்வாம்ஸதாபரிசிந்தயந்,
கேஷுகேஷுசபாவேஷு சிந்த்யோஸிபகவந்மயா. (கஎ)

நான் (பக்தியோகத்தை ஆசிரயித்து) எப்பொழுதும் உன்னையே நினைத்துக்கொண்டு உன்னையறிந்துகொள்வது எப்படி, பகவானே! எந்தெந்த விஷயங்களில், நான் உன்னைத் தியானிக்கவேண்டும். (கஎ)

𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌯𑍋𑌗𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌂 𑌚 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨।
𑌭𑍂𑌯𑌃 𑌕𑌥𑌯 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌹𑌿 𑌶𑍃𑌣𑍍𑌵𑌤𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌮𑍇𑌽𑌮𑍃𑌤𑌮𑍍॥

விஸ்தரேணுத்மனோயோகம் விபூதிஞ்சஜநார்தந,
பூயஃகதயத்ருப்திர்ஹிஸ்ருண்வதோ நாஸ்திமேம்ருதம். (கஅ)

ஜனுர்த்தனு! உன்னுடைய ஸ்ருஷ்டிகர்த்ருவத்தையும், ஜகந்நியந்த்ருத்வத்தையும், இன்னம் விஸ்தாரமாகச் சொல்லுவாயாக. இந்த அம்ருதத்தைக்கேட்கிற எனக்கு திருப்தியில்லே. (கஅ)

ஸ்ரீ கிருஷ்ண வாக்கியம்.

𑌹𑌨𑍍𑌤 𑌤𑍇 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌭𑍂𑌤𑌯𑌃।
𑌪𑍍𑌰𑌾𑌧𑌾𑌨𑍍𑌯𑌤𑌃 𑌕𑍁𑌰𑍁𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍋 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌸𑍍𑌯 𑌮𑍇॥

ஹந்ததேகதயிஷ்யாமிதிவ் யாஹ்யாத்மவிபூதயஃ,
ப்ரதாந்யதஃகுருஸ்ரேஷ்ட நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே.(க௯)

ஓ குருசிரேஷ்ட்டனே! சுபகரங்களான என்னுடைய அம்ஸங்களில் பிரதானமா யிருப்பவற்றை மாத்திரம் என் தயைக்குப் பாத்திரனான உனக்குச் சொல்லுகிறேன். என் விஸ்தாரத்துக்கு முடிவில்லை, (அநந்த மாகையால் விஸ்தாரமாய்ச் சொல்லுவதற்கும் கேட்பதற்கும் ஸாத்யப்படாது.)

𑌅𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌶𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌃।
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌚॥

அஹமாத்மாகுடாகேச ஸர்வபூதாஶயஸ்திதஃ,
அஹமாதிஶ்சமத்யஞ்ச பூதாநாமந்தஏவச. (௨0)

குடாகேசனே! நான் சர்வ பிராணிகளுக்கும் இருதயத்தி லிருக்கிற ஆத்மாவா யிருக்கிறேன், நான் எல்லாவற்றுக்கும் ஆதிமத்யாந்தங்களாயு மிருக்கிறேன். (௨0)

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌹𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂𑌰𑌵𑌿𑌰𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍।
𑌮𑌰𑍀𑌚𑌿𑌰𑍍𑌮𑌰𑍁𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌹𑌂𑌶𑌶𑍀॥

ஆதித்யாநாமஹம்விஷ்ணுர் ஜ்யோதிஷாம்ரவிரம்சுமாந்,
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம்சசீ. (உக)

துவாதசாதித்யர்களுக்குள்ளே விஷ்ணு வென்கிற பன்னிரண்டாவது சூரியனும், கிரக நக்ஷத்ராதி பிரகாச வஸ்துக்களில் மிகவும் பிரகாசமுள்ள சூரியனும், ஸப்தவாயுக்களில் மரீசி யென்பவனும், நக்ஷத்திரங்களுக்குள்ளே அவைகளுக்குத் தலைவனான சந்திரனும் நானே யாகிறேன். (உக)

𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿𑌵𑌾𑌸𑌵𑌃।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂𑌮𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿𑌚𑍇𑌤𑌨𑌾॥

வேதாநாம்ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மிவாஸவ:,
இந்த்ரியாணாம்மநஸ்சாஸ்மி பூதாநாமஸ்மிசேதநா. (உஉ)

வேதங்களுக்குள்ளே ஸாமவேதம் நான், தேவதைக ளுக்குள்ளே இந்திரன்நான், இந்திரியங்களுக்குள்ளே மனம் நான், பிராணிகளுக்குள்ளே புத்தி நான். (௨௨)

𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌶𑌙𑍍𑌕𑌰𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌵𑌿𑌤𑍍𑌤𑍇𑌶𑍋 𑌯𑌕𑍍𑌷𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌮𑍍।
𑌵𑌸𑍂𑌨𑌾𑌂 𑌪𑌾𑌵𑌕𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌮𑍇𑌰𑍁𑌃 𑌶𑌿𑌖𑌰𑌿𑌣𑌾𑌮𑌹𑌮𑍍॥

ருத்ராணும்ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோயக்ஷரக்ஷஸாம்,
வஸுநாம்பாவகஶ்சாஸ்மி மேருஶ்ஶிகரிணமஹம். (௨௩)

ஏகாதசருத்ரர்களுக்குள்ளே சங்கரன்நான், யக்ஷராக்ஷ ஸர்களுக்குள்ளே குபேரன்நான், அஷ்டவசுக்களுக்குள்ளே பாவகன் நான், பர்வதங்களுக்குள்ளே மேருபர்வதம் நான்.

𑌪𑍁𑌰𑍋𑌧𑌸𑌾𑌂 𑌚 𑌮𑍁𑌖𑍍𑌯𑌂 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌮𑍍।
𑌸𑍇𑌨𑌾𑌨𑍀𑌨𑌾𑌮𑌹𑌂 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌃 𑌸𑌰𑌸𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌸𑌾𑌗𑌰𑌃॥

புரோதஸாஞ்சமுக்யம்மாம் வித்திபார்த்தப்ருஹஸ்பதிம்,
ஸேநாநீநாமஹம்ஸ்கந்தஸ் ஸரஸாமஸ்மிஸாகரஃ. (௨௪)

பார்த்தா! புரோகிதர்களுக்குள்ளே முக்கியனான பிரகஸ்பதி நானென்று தெரிந்து கொள்வாயாக, சேனாபதிகளுக்குள்ளே சுப்பிரமணியன் நான், நீர் நிலைகளுக்குள்ளே சமுத்திரம் நான். (௨௪)

𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌭𑍃𑌗𑍁𑌰𑌹𑌂 𑌗𑌿𑌰𑌾𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑌏𑌕𑌮𑌕𑍍𑌷𑌰𑌮𑍍।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌜𑌪𑌯𑌜𑍍𑌞𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿𑌮𑌾𑌲𑌯𑌃॥

மஹர்ஷீணாம்ப்ருகுரஹம்கி ராமஸ்ம்யேகமக்ஷரம்,
யக்ஞாநாம்ஜபயக்ஞோஸ்மிஸ் தாவராணாம்ஹிமாலயஃ. (௨௫)

மஹரிஷிகளுக்குள்ளே பிருகுமஹரிஷி நான், பதங்களுக்குள்ளே பிரணவபதம் நான், யஜ்ஞங்களுக்குள்ளே ஜபயஜ்ஞம் நான், ஸ்தாவரங்களுக்குள்ளே ஹிமாலயம் நான்.()

𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌦𑌃।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌪𑌿𑌲𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃॥

அச்வத்தஸ்ஸர்வவ்ருக்ஷாணம் தேவர்ஷீணாஞ்சநாரதா:,
கந்தர்வாணாஞ்சித்ரரதஸ் ஸித்தாநாங்கபிலொமுநி:. (உசு)

மரங்களெல்லாவற்றுள்ளும் அரசமரம்நான், தேவரிஷிகளுக்குள்ளே நாரதன்நான், கந்தர்வர்களுக்குள்ளே சித்ரரதன் நான், சித்தர்களுக்குள்ளே கபிலமஹரிஷி நான். (உசு)

𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌮𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍।
𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌮𑍍।

உச்சைஸ்ரவஸமச்வாநாம் வித்திமாமம்ருதோத்பவம்,
ஐராவதங்கஜேந்த்ராணாம் நராணாஞ்சநராதிபம். (உஎ)

குதிரைகளுக்குள்ளே அமுதத்திற் பிறந்த உச்சைஸ்ரவஸும், திக்கஜங்களுக்குள்ளே ஐராவதமும், மனிதர்களில் அரசனும் நானென்று தெரிந்துகொள்வாயாக. (௨௭)

𑌆𑌯𑍁𑌧𑌾𑌨𑌾𑌮𑌹𑌂𑌵𑌜𑍍𑌰𑌂 𑌧𑍇𑌨𑍂𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ।
𑌪𑍍𑌰𑌜𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑌃 𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌮𑌸𑍍𑌮𑌿𑌵𑌾𑌸𑍁𑌕𑌿𑌃 ॥

ஆயுதாநாமஹம்வஜ்ரம் தேநூநாமஸ்மிகாமதுக்,
ப்ரஜநஸ்சாஸ்மிகந்தர்ப்ப ஸ்ஸர்ப்பாணாமஸ்மிவாஸுகிஃ. (௨௮)

ஆயுதங்களுக்குள்ளே வஜ்ராயுதம் நான், பசுக்களில் காமதேனு நான், உத்பத்திக்குக் காரணனான மன்மதன் நான், பாம்புகளில் வாசுகி நான். (௨௮)

𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌾𑌗𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌯𑌾𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌮𑌰𑍍𑌯𑌮𑌾 𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌯𑌮𑌃 𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥

அநந்தஶ்சாஸ்மி நாகாநாம் வருணோயாதஸாமஹம்,
பித்ரூணாமர்யமாசாஸ்மிய மஸ்ஸம்யமதாமஹம். (உகூ)

நாகங்களுக்குள்ளே (அநேகம் தலைகளுள்ள பாம்புகளுக்குள்ளே) ஆதிசேஷன்நான், ஜலதேவதைகளுக்குள்ளே வருணன் நான், பிதிரர்களுக்குள்ளே அரியமன் நான், தண்டிப்பவர்களுக்குள்ளே யமன் நான். (உகூ)

𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌲𑌯𑌤𑌾𑌮𑌹𑌮𑍍।
𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌮𑍃𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌽𑌹𑌂 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌶𑍍𑌚 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍॥

ப்ரஹ்லாதச்சாஸ்மிதைத்யாநாம்காலஃகலயதாமஹம்,
ம்ருகாணாஞ்சம்ருகேந்த்ரோஹம் வைநதேயச்சபக்ஷிணாம். (௩0)

அசுரர்களில் பிரகலாதன் நான், ஆக்ரமிப்பவர்களில் மிருத்யு நான், மிருகங்களில் சிங்கம் நான், பக்ஷிகளில் கருடன் நான். (௩0)

𑌪𑌵𑌨𑌃 𑌪𑌵𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌰𑌾𑌮𑌃 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑌾𑌮𑌹𑌮𑍍।
𑌝𑌷𑌾𑌣𑌾𑌂 𑌮𑌕𑌰𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌸𑍍𑌰𑍋𑌤𑌸𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀॥

பவந:பவதாமஸ்மி ராமஶ்ஶஸ்த்ரப்ருதாமஹம்,
ஜ²ஷாணாம்மகரஶ்சாஸ்மிஸ் ரோதஸாமஸ்மிஜாஹ்நவீ. (௩௧)

சஞ்சரிக்கிறவர்களுக்குள்ளே நான் வாயுவா யிருக்கிறேன், ஶஸ்த்ரதாரிகளுக்குள்ளே நான்ராமனுயிருக்கிறேன், மீன்களுக்குள்ளே நான் மகரமீனுயிருக்கிறேன், பிரவாகங்களில் நான் கங்கையாயிருக்கிறேன். (௩௧)

𑌸𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚𑍈𑌵𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑌨।
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌦𑌃 𑌪𑍍𑌰𑌵𑌦𑌤𑌾𑌮𑌹𑌮𑍍॥

ஸர்க்காணுமாதிரந்தச்ச மத்யஞ்சைவாஹமர்ஜுந,
அத்யாத்மவித்யாவித்யாநாம் வதா:ப்ரவததாமஹம். (௩௨)

அர்ஜுனு! சிருஷ்டியி லிருக்கிற வஸ்துக்களுக்கு ஆதியும், அநந்தமும், நடுவும்நான், வித்யைகளில் பிரம்மவித்யை

நான், வாதம் செய்பவர்களுக்கு வாதரூபமா யிருப்பவனும் நான். (௩௨)

𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌾𑌮𑌕𑌾𑌰𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌃 𑌸𑌾𑌮𑌾𑌸𑌿𑌕𑌸𑍍𑌯 𑌚।
𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌯𑌃 𑌕𑌾𑌲𑍋 𑌧𑌾𑌤𑌾𑌹𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌃॥

*அக்ஷராணாமகாரோஸ்மி த்வந்த்வஸ்ஸாமாஸிகஸ்யச,*
*அஹமேவாக்ஷயஃகாலோ தாதாஹம்விச்வதோமுகஃ.* (௩௩)

அக்ஷரங்களுக்குள்ளே அகாரம் நான், ஸமாஸங்களுக்குள்ளே த்வந்த்வஸமாஸம் நான், (மற்ற ஸமாஸங்களில் ஒரு பதத்தினுடைய அர்த்தம் மாத்திரம் பிரதானமாகும், த்வந்த்வஸ ..ாஸத்தில் மாத்திரம் சேர்ந்த எல்லாப் பதங்களுடைய அர்த்தங்களுடைய அர்த்தங்களும் பிரதாநங்கள்) நாசமில்லாத காலம் நான், சதுர்முகனை பிரம்மா நான். ()

𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌹𑌰𑌶𑍍𑌚𑌾𑌹𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌶𑍍𑌚 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌾𑌮𑍍।
𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌵𑌾𑌕𑍍𑌚 𑌨𑌾𑌰𑍀𑌣𑌾𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾॥

ம்ருத்யுஸ்ஸர்வஹரச்சாஹ முத்பவச்சபவிஷ்யதாம்,
கீர்த்திஶ்ஶ்ரீர்வாக்சநாரீணாம் ஸ்ம்ருதிர்மேதாத்ருதிஃக்ஷமா. ()

எல்லாவஸ்துக்களையும் ஹரிக்கிற மிருத்யு நான், உண்டாகப்போகிற வஸ்துக்களுக்கு உத்பத்திநான், ஸ்திரீகளுக்குள்ளே திருமகளும், கீர்த்தியும், வாக்கும், ஸ்மிருதியும், மேதையும், த்ருதியும், க்ஷமையும் நான், லக்ஷ்மீ முதலானவர்கள் பகவானுடைய அஸாதாரண சக்திகள். (௩௪)

𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍।
𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌽𑌹𑌮𑍃𑌤𑍂𑌨𑌾𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃॥

ப்ருஹத்ஸாமததாஸாம்நாம் காயத்ரீச்சந்தஸாமஹம்,
மாஸாநாம்மார்க்கசீர்ஷோ ஹம்ருதூநாம்குஸுமாகர. (௩௫)

ஸாமங்களில் பிருஹத் என்கிறஸாமமும் நான், வேதங்களில் காயத்ரி நான், மாசங்களில் மார்கழிமாசம் நான், ருதுக்களில் வசந்தருதுவும் நான். (௩௫)

𑌦𑍍𑌯𑍂𑌤𑌂 𑌛𑌲𑌯𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌜𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥

த்யூதஞ்சலயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம்,
ஜயோஸ்ஃவ்யவஸாயோஸ்மி ஸத்வம்ஸத்வதாமஹம். (௩௬)

கபடம் செய்கிறவர்களுக்கு நான்சூது, பராக்கிரமமுள்ளவர்களுக்குப் பராக்கிரமம் நான், ஜயம் நான், வியவஸாயம் (பிரயத்நம்) நான், ஸத்வவந்தர்களுக்கு ஸத்வம் நான்.

𑌵𑍃𑌷𑍍𑌣𑍀𑌨𑌾𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑌾𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 ।
𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌮𑌪𑍍𑌯𑌹𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌵𑍀𑌨𑌾𑌮𑍁𑌶𑌨𑌾 𑌕𑌵𑌿𑌃 ॥

வ்ருஷ்ணீநாம்வாஸுதேவோஸ்மி பாண்டவாநாந்தநஞ்சயஃ,
முநீநாமப்யஹம்வ்யாஸஃ கவீநாமுசநாகவிஃ. (௩௭)

யாதவர்களில் வாசுதேவன்நான், பாண்டவர்களில்அர்ஜுனன் நான், ருஷிகளில் வியாஸன் நான், கவிகளில் (வித்வான்களில்) சுக்கிரன் நான். (௩௭)

𑌦𑌣𑍍𑌡𑍋 𑌦𑌮𑌯𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌨𑍀𑌤𑌿𑌰𑌸𑍍𑌮𑌿 𑌜𑌿𑌗𑍀𑌷𑌤𑌾𑌮𑍍 ।
𑌮𑍌𑌨𑌂 𑌚𑍈𑌵𑌾𑌸𑍍𑌮𑌿 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥

தண்டோதமயதாமஸ்மி நீதிரஸ்மிஜிகீஷதாம்,
மௌநஞ்சைவாஸ்மிகுஹ்யாநாம் ஜ்ஞாநம்ஜ்ஞாநவதாமஹம். ()

அர்ஜுநா! தண்டிப்பவர்களுக்குத் தண்டம் நான், வெல்ல விரும்புவோருக்கு ராஜநீதி நான், ரஹஸ்யங்களுக்கு மௌனம் நான், ஜ்ஞானவான்களுக்கு ஜ்ஞானம் நான். ()

𑌯𑌚𑍍𑌚𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍀𑌜𑌂 𑌤𑌦𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌨𑌾 𑌯𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌯𑌾 𑌭𑍂𑌤𑌂 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ॥

யச்சாபிஸர்வபூதாநாம் பீஜந்ததஹமர்ஜுந,
நததஸ்திவிநாயத்ஸ்யாந் மயாபூதஞ்சராசரம். (௩௯)

அர்ஜுநா! மேலும், சமஸ்தவஸ்துக்களுக்கும் பீஜம் (ஆதிகாரணம்) நான், ஜங்கமமாகிலும் ஸ்த்தாவரமாகிலும் நானில்லாத வஸ்து இல்லை. (௩௯)

𑌨𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑌰𑌂𑌤𑌪।
𑌏𑌷 𑌤𑍂𑌦𑍍𑌦𑍇𑌶𑌤𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌵𑌿𑌭𑍂𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍋 𑌮𑌯𑌾॥

நாந்தோஸ்திமமதிவ்யாநாம் விபூதீநாம்பரந்தப,
ஏஷதூத்தேஶதஃப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோமயா. (௪0)

பரந்தபா! அப்ராக்ருதமான என் மகிமைகளுக்கு அந்தம் (பரிமிதி) இல்லை, என் மஹிமைகளின் இந்த விஸ்தாரம் ஸங்க்ரஹமாய்ச் சொல்லப்பட்டது. (௪0)

𑌯𑌦𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍇𑌵 𑌵𑌾।
𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑌾𑌵𑌗𑌚𑍍𑌛 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌤𑍇𑌜𑍋𑌽𑌂𑌶𑌸𑌂𑌭𑌵𑌮𑍍॥

யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா.
தத்ததேவாவகச்சத்வம் மமதேஜோம்ஶஸம்பவம். (௪௧)

எந்தெந்த வஸ்துக்கள் விசேஷமுள்ளனவோ, தனதான்யாதி ஸம்ருத்தி யுள்ளனவோ, சுபகாரியங்களிலேயே உத்

யுக்தமா யிருக்கின்றனவோ, அவை யாவும் என்னுடைய தேஜஸின் அம்ஸத்தில் உண்டானவை யென்று தெரிந்து கொள்வாயாக. (௪௧)

𑌅𑌥𑌵𑌾 𑌬𑌹𑍁𑌨𑍈𑌤𑍇𑌨 𑌕𑌿𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍇𑌨 𑌤𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌵𑌿𑌷𑍍𑌟𑌭𑍍𑌯𑌾𑌹𑌮𑌿𑌦𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑍇𑌕𑌾𑌂𑌶𑍇𑌨 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌜𑌗𑌤𑍍 ॥

அதவாபஹுநைதேநகிம் ஜ்ஞாதேநதவார்ஜுந,
விஷ்டப்யாஹமிதம்க்ருத்ஸ்நமேகாம்ஶேநஸ்திதோஜகத். (௪௨)

அர்ஜுனா! அல்லது இந்த வெகுவிதமான ஜ்ஞானத்தால் உனக்கென்ன உபயோகம், நானே இந்த ஸமஸ்த ஜகத்தையும் என் மகிமையின் ஒரு பாகத்தினால் நிறுத்திக் கொண்டிருக்கிறேன். (௪௨)

ஸ்ரீ கீதாஸு விபூதி யோக மென்கிற
பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.





ஸ்ரீ கிருஷ்ண பகவான் விஸ்வரூபம்.

# பதினொன்றாவது அத்தியாயம்

# விசுவரூப சந்தர்சன யோகம்.



### அர்ஜுன வாக்கியம்.

𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍।
𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌚𑌸𑍍𑌤𑍇𑌨 𑌮𑍋𑌹𑍋𑌽𑌯𑌂 𑌵𑌿𑌗𑌤𑍋 𑌮𑌮॥

மதநுக்ரஹாயபரமம் குஹ்யமத்யாத்மஸம்ஜ்ஞிதம்,
யத்வயோக்தம்வசஸ்தே நமோஹோயம்விகதோமம. (க)

என்னை அனுக்கிரகிக்கும்பொருட்டு நீசொன்ன பரம ரஹஸ்யமாய் ஆத்மஸ்வரூபஜ்ஞானஹேதுவாகிய வாக்கியத்தால் எனது அஜ்ஞானம் விட்டது. (க)

𑌭𑌵𑌾𑌪𑍍𑌯𑌯𑍌 𑌹𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍌 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑍋 𑌮𑌯𑌾 ।
𑌤𑍍𑌵𑌤𑍍𑌤𑌃 𑌕𑌮𑌲𑌪𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

பவாப்யயௌஹிபூதாநாம் ச்ருதௌவிஸ்தரஸோமயா,
த்வத்தஃகமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபிசாவ்யயம். (௨)

கமலபத்ராக்ஷா! எல்லா வஸ்துக்களுக்கும் உன்னிடத்திலேயே உத்பத்தி லயங்களையும், உன்னுடைய நித்யமான மாஹாத்மியத்தையும் உன்னிடத்திலேயே நான் விஸ்தாரமாய்க் கேட்டேன். (௨)

𑌏𑌵𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌥𑌾𑌤𑍍𑌥 𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰 ।
𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ॥

ஏவமேதத்யதாத்தத்வ மாத்மாநம்பரமேச்வர,
த்ரஷ்டுமிச்சாமிதேரூப மைச்வரம்புருஷோத்தம. (௩)

ஓ பரமேஶ்வரா! நீ உன்னைக் குறித்துச் சொன்னவையெல்லாம் நிச்சயமே புருஷோத்தமா! உன்னுடைய ஈஶ்வரஸ்வரூபத்தை தரிஸனம்செய்வதற்கு விரும்புகிறேன். ()

உ ந்ருவெஸ ஜி தவ்ஷு ஞ்ஞ்யம் ஊயா ஜ்ரஷ் சூஜி திவஷு வெஹா।
யொ செுஶூ தவெ தாவெச்ஷும் ஜுஶ லியா தா நஊவ்யயஜ்॥

மந்யஸேயதிதச்சக்யம் மயாத்ரஷ்டுமிதிப்ரபோ,
யோகேஸ்வரததோமேத்வம் தர்ஶயாத்மாநமவ்யயம். (௪)

ஓ பிரபு! ஸமஸ்த கல்யாண குணங்களோடு கூடியிருக்கிற ஈஶ்வரா! அந்தரூபத்தைதரிசிப்பதற்கு எனக்கு ஸாத்யமென்று நீ நினைத்தபக்ஷத்தில் எனக்கு உன்னுடைய அந்த ஸ்வரூபத்தை முழுதும் காட்டவேண்டும். (௪)

ஶ்ரீ கிருஷ்ண வாக்கியம்,

வஶ்ய மெவோயஷ ஹூவாணி ஶதமொஶாயஸஹஷுரஶஃ।
நாநாவியாநிஷிவ்யாநி நாநாவணஹாக்ருதீநிவ॥

பச்யமேபார்த்தரூபாணி ஶதஶோதஸஹஸ்ரஶஃ,
நாநாவிதாநிதிவ்யாநி நாநாவர்ணாக்ருதீநிச. (ரு)

பார்த்தா! நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் நாநுவிதங்களாய், அப்ராக்ருதங்களாய், அநேகநிறங்களோடும், அனேக ஆகாரங்களோடும் கூடின என்னுடைய ரூபங்களைப் பார்ப்பாயாக. (ரு)

𑌪𑌶𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑍍𑌵𑌸𑍂𑌨𑍍𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌨𑍍 𑌅𑌶𑍍𑌵𑌿𑌨𑍌𑌮𑌰𑍁𑌤𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌬𑌹𑍂𑌨𑍍𑌯𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌪𑌶𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌾𑌣𑌿𑌭𑌾𑌰𑌤॥

பஶ்யாதித்யாந்வஸூந்ருத்ரா நச்விநௌமருதஸ்ததா,
பஹூந்யத்ருஷ்டபூர்வாணி பச்யாச்சர்யாணிபாரத. (சு)

ஓ பாரதா! எனது ஒரு ஸ்வரூபத்தில், நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும், இதற்குமுன்னே பார்க்கப்படாத அநேக ஆச்சரியமான வஸ்துக்களையும், துவாதச

ஆதித்தியர்களையும் அஷ்டவசுக்களையும் ஏகாதச ருத்திரர் களையும் இரண்டு அஸ்வினிதேவதைகளையும், ஸப்த மருத் துக்களையும் பார்ப்பாயாக. (௬)

𑌇𑌹𑍈𑌕𑌸𑍍𑌥𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌾𑌦𑍍𑌯 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍।
𑌮𑌮 𑌦𑍇𑌹𑍇 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌯𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑌿॥

இஹைகஸ்தஜகத்க்ருத்ஸ்நம் பச்யாத்யஸசராசரம்,
மமதேஹேகுடாகேஶ யச்சாந்யத்ரஷ்டுமிச்சஸி. (எ)

ஓ குடாகேசனே! இந்த என் சரீரத்தில், ஸர்வசராசரங் களோடுகூடின ஸர்வ லோகங்களையும், பார்க்க விரும்பின இதர வஸ்துக்க ளெல்லாவற்றையும் ஒரு பாகத்திலிருப்ப தைப் பார்ப்பாயாக. (எ)

𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌶𑌕𑍍𑌯𑌸𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌨𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌵𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍॥

ந துமாம்ஶக்ஷ்யஸேத்ரஷ்டு மநேநைவஸ்வசக்ஷுஷா,
திவ்யந்ததாமிதேசக்ஷுஃ பச்யமேயோகமைச்வரம். (அ)

உனக்கு இந்த பிராக்ருதமானகண்ணால் என்னைப்பார்ப்பதற்குக் கூடாது. உனக்கு அப்ராக்ருதமான கண்ணைக் கொடுக்கிறேன். சுத்த ஜ்ஞாநாநந்தாதி ரூபமான என் ஈஸ்வரஸ்வரூபத்தையும் என் விபூதிகளையும் பார்ப்பாயாக. (அ)

ஸஞ்சய வாக்கியம்.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃।
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍॥

ஏவமுக்த்வாததோராஜந் மஹாயோகேஸ்வரோஹரிஃ,
தர்ச்யாமாஸபார்த்தாய பரமம்ரூபமைச்வரம். (௯)

திருதராஷ்டிர மஹாராஜனே! இப்படிசொல்லி, பிறகு பெரிய யோகங்களுக்கு ஈச்வரனை ஸ்ரீ கிருஷ்ணபகவான்,

அர்ஜுனனுக்குத் தன்னுடைய முக்கியமான ஈஸ்வரஸ்வரூபத்தைக் காட்டினர். (௯)

𑌅𑌨𑍇𑌕𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑌯𑌨 𑌮𑌨𑍇𑌕𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍।
𑌅𑌨𑍇𑌕𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌯𑍁𑌧𑌮𑍍॥

அநேகவக்த்ரநயந மநேகாத்புததர்ஶநம்,
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம். (௧0)

அநேக முகங்களும் அநேக நேத்திரங்களு முள்ளதாய் அநேகமான ஆச்சரிய வஸ்துக்களோடும் அநேக அப்ராக்ருத ஆபரணங்களோடும் கூடி அநேகங்களான திவ்யாயுதங்களைத் தரித்துக்கொண்டு, (௧0)

𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌮𑍍।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑌂 𑌦𑍇𑌵 𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍॥

திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தாநுலேபநம்,
ஸர்வாச்சர்யமயந்தேவ மநந்தம்விஸ்வதோமுகம். (கக)

அப்ராக்ருதங்களான புஷ்பமாலையும் பீதாம்பரமும் அப்ராக்ருத கந்த லேபனமும் உள்ளதாய் ஆச்சரியங்களெல்லாம் நிறைந்து முடிவற்றதாய் எல்லாத்திக்குகளிலும் முகங்களுள்ளதாய் இருக்கிற திவ்ய ரூபத்தைக் காட்டினர். (கக)

𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌵𑍇𑌦𑍍𑌯𑍁𑌗𑌪𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾।
𑌯𑌦𑌿 𑌭𑌾𑌃 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

திவிஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா,
யதிபாஸ்ஸத்ருசீஸாஸ்யா த்பாஸஸ்தஸ்யமஹாத்மநஃ. (கஉ)

ஆகாசத்தில் ஆயிரஞ் சூரியர்களின் ஒளி ஒரே காலத்தில் உண்டாயின், அது அந்த மஹா சரீரதேஜஸுக்கு ஒப்பாகும். (கஉ)

𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌸𑍍𑌥𑌂𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌧𑌾।
𑌅𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑍇𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌸𑍍𑌤𑌦𑌾॥

தத்ரைகஸ்தம்ஜகத்க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தமநேகதா,
அபஸ்யத்தேவதேவஸ்ய சரீரேபாண்டவஸ்ததா. (கரு)

அப்பொழுது அர்ஜுனன் தேவதேவனை பகவானுடைய அந்தச்சரீரத்தில், அநேகவிதமான பிரிவுகளுடன்கூடிய அகண்டபிரபஞ்சம் ஒரு பாகத்திலிருப்பதைப் பார்த்தான்.

𑌤𑌤𑌸𑍍𑌸𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌹𑍃𑌷𑍍𑌟𑌰𑍋𑌮𑌾𑌧𑌨𑌂𑌜𑌯𑌃।
𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯𑌶𑌿𑌰𑌸𑌾𑌦𑍇𑌵𑌂 𑌕𑍃𑌤𑌾𑌂𑌜𑌲𑌿𑌰𑌭𑌾𑌷𑌤॥

ததஸ்ஸவிஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமாதநஞ்ஜயஃ,
ப்ரணம்யஸிரஸாதேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத. (கச)

பிறகு தனஞ்சயன், ஆச்சரியத்தால் ஆவேசிக்கப்பட்டவனாய், புளகாங்கனாய், அந்த பகவானை தலையினாலே வணங்கி கைகூப்பிச் சொல்லினான். (கச)

அர்ஜ்ஜுன வாக்கியம்.

𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿𑌦𑍇𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌵𑌦𑍇𑌵𑌦𑍇𑌹𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌂𑌘𑌾𑌨𑍍।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑍀𑌶𑌂 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌮𑍍
𑌋𑌷𑍀𑌂𑌶𑍍𑌚𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑌗𑌾𑌂𑌶𑍍𑌚𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍॥

பச்யாமிதேவாந்ஸ்தவதேவதேஹே ஸர்வாந்ஸ்ததாபூதவிசேஷ சங்காந், ப்ரஹ்மாணமீசம்கமலாஸநஸ்தம் ருஷீம்சஸர்வாநுரகாம்ஸ் சதிவ்யாந். (கரு)

தேவா! உம்முடைய சரீரத்தில் ஸமஸ்த தேவதைகளையும் அப்படியே ஸர்வபிராணிகளின் பேதங்களையும், பிரமா

வையும், பிரம்மாவை ஆச்ரயித்திருக்கும் சிவனையும், தேவ ரிஷிகள் முதலான ரிஷிகளெல்லாரையும் வாஸுகி, தக்ஷகன்முதலான அநேக திவ்யமான ஸர்ப்பங்களையும் பார்க்கிறேன். (கரு)

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம்।
நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப॥

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம் பஶ்யாமித்வாம்ஸர்வதோநந்தரூபம், நாந்தம்நமத்யம்நபுநஸ்தவாதிம்பஶ்யாமிவிஶ்வேஶ்வரவிஶ்வரூப. (கசு)

அநேகமான கைகளையும், அநேகமான வயிறுகளையும், அநேகமானமுகங்களையும், அநேகமான கண்களையும் உடை

யவனாய்; முடிவில்லாத ரூபத்தோடு கூடின வுன்னை எல்லா வற்றிலும் பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஓவிஶ்வேஶ்வரா! ஸர்வ ஜகத்ஸ்வரூபா! உன்னுடைய முடிவையாகிலும், நடுவையாகிலும், முதலையாகிலும் நான் பார்க்கவில்லை. (கசு)

𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌿𑌣𑌂 𑌚
𑌤𑍇𑌜𑍋𑌰𑌾𑌶𑌿𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋 𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌤𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌦𑍍
𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌨𑌲𑌾𑌰𑍍𑌕𑌦𑍍𑌯𑍁𑌤𑌿 𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑍍 ॥

கிரீடிநம்கதிநஞ்சக்ரிணஞ்சதேஜோராசிம்ஸர்வதோதீப்திமந்தம் [ம்
பஶ்யாமித்வாம்துர்நிரீக்ஷ்யம்ஸமந் தாத்தீப்தாநலார்க்கத்யுதிமப்ரமேய

தேஜோராசியாய், எல்லாத் திக்குகளிலும் பிரகாசித்துக்கொண்டு, பார்க்கவொண்ணாதவனாய், நான்குபக்கங்களி

லும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்னிசூரியர்கள்போன்ற ஒளியுள்ள அப்ரமேயனான வுன்னை கிரீடம், கதை, சக்கரம் என்பவைகளைத் தரித்திருப்பவனாகப் பார்க்கிறேன். (கஎ)

𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂𑌪𑌰𑌮𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂
𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑍍।
𑌤𑍍𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌃𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌧𑌰𑍍𑌮𑌗𑍋𑌪𑍍𑌤𑌾
𑌸𑌨𑌾𑌤𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌮𑌤𑍋𑌮𑍇॥

த்வமக்ஷரம்பரமம்வேதிதவ்யம்த்வமஸ்யவிஶ்வஸ்யபரந்நிதாநம் [மே.
த்வமவ்யயஶ்ஶாஶ்வததர்மகோப்தா ஸநாதநஸ்த்வம்புருஷோமதோ

நீயே அறியவேண்டிய ஸர்வோத்க்ருஷ்டமான அக்ஷரம் (ஶாஶ்வத பிரம்மம்,) நீயே இந்தலோகத்துக்கு முக்கியமானஆதாரம், உனக்கு நாசமில்லை. ஶாஶ்வதமான தர்ம

த்தை பாலிக்கிறவன் நீ, நித்தியரூபனான புருஷனும் நீயே யென்று யெனக்குத் தெரிந்தது. (௧௮)

𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑍍
𑌅𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌂 𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂
𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌪𑌨𑍍𑌤𑌮𑍍॥

அநாதிமத்யாந்தமநந்தவீர்ய மநந்தபாஹும்சசிசூர்யநேத்ரம், பச்யாமித்வாம்தீப்தஹுதாசவக்த்ரம் ஸ்வதேஜஸாவிச்வமிதந்தபந்தம்.

ஆதிமத்யாந்தங்க ளில்லாத அபரிமித சக்தியுக்தனை, அபரிமிதங்களான தோள்களையுடையவனை, சந்திர சூரியர்களைக் கண்களாக வுடையவனை, ஜ்வலித்துக்கொண்டிருக்கிற பிரளயகாலாக்கினியை நிகர்த்த முகத்தையுடையவனை

உன் ஒளியால் இந்த லோகத்தைத் தபிக்கச் செய்கிற வுன்
னைப் பார்க்கிறேன். (௧௯)

𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋 𑌰𑌿𑌦𑌮𑌨𑍍𑌤𑌰𑌂𑌹𑌿
𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑍇𑌨 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚𑌸𑌰𑍍𑌵𑌾𑌃।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌂𑌰𑍂𑌪𑌮𑍁𑌗𑍍𑌰𑌂𑌤𑌵𑍇𑌦𑌂
𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍॥

த்யாவாப்ருதிவ்யோரிதமந்த்ரம்ஹி வ்யாப்தந்தவயைகேநதிசஶ்சஸர்வா:, த்ருஷ்ட்வாத்புதம்ரூபமுக்ரந்தவேதம் லோகத்ரயம்ப்ரவ்யதிதம்மஹாத்மந். (௨௦)

ஊர்த்துவலோகமும், அதோலோகமும், மத்யபிரதேசமும், எல்லாத் திக்குகளும் உன்னொருவனாலேயே நிறைந்திருக்கின்றன. ஓ மஹாத்மா! உன்னுடைய ஆச்சரியமான இந்த உக்ர ரூபத்தைப் பார்த்து, மூன்று லோகங்களும் கடகடவென்று நடுங்குகின்றன. (௨௦)

𑌅𑌮𑍀 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍁𑌰𑌸𑌙𑍍𑌘𑌾𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿
𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑍀𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌞𑍍𑌜𑌲𑌯𑍋 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿।
𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃
𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑍁𑌷𑍍𑌕𑌲𑌾𑌭𑌿𑌃॥

*அமீஹித்வாம்ஸுரஸங்காவிஶந்தி கேசித்பீதா:ப்ராஞ்சலயோ க்ருணந்தி, ஸ்வஸ்தீத்யுக்த்வாமஹர்ஷிஸித்தஸங்கா: ஸ்துவந்தித்வாம்ஸ்துதிபி:புஷ்கலாபி:.* (உக)

இந்தத் தேவ ஸமூஹங்கள் உன்னிடத்தில் பிரவேசியா நின்றன சிலர் உக்ரரூபத்தைப் பார்த்து, பயந்து, கைகுவித்துத் துதிக்கிறார்கள். மஹரிஷிகளும், சித்தர்களும் ஸ்வஸ்தியென்று சொல்லி, பூர்ணமான துதிகளால் தோத்திரம்பண்ணுகிறார்கள். (உக)

𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌵𑌸𑌵𑍋 𑌯𑍇𑌚𑌸𑌾𑌧𑍍𑌯𑌾
𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌿𑌨𑍌𑌮𑌰𑍁𑌤 𑌶𑍍𑌚𑍋𑌷𑍍𑌮𑌪𑌾𑌶𑍍𑌚।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌯𑌕𑍍𑌷𑌾𑌸𑍁𑌰 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂𑌘𑌾𑌃
𑌵𑍀𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍇𑌤𑍍𑌵𑌾𑌂 𑌵𑌿𑌸𑍍𑌮𑌿𑌤𑌾𑌶𑍍𑌚𑍈𑌵𑌸𑌰𑍍𑌵𑍇॥

ருத்ராதித்யாவஸவோயேசஸாத்யா விஶ்வேஶ்விநௌமருதஶ்சோஷ்மபாஶ்ச, கந்தர்வயக்ஷாஸ்ஸுரஸித்தஸங்கா வீக்ஷந்தேத்வாம்விஸ்மிதாஸ்சைவஸர்வே. (உஉ)

ருத்ரர்கள், ஆதித்யர்கள், வசுக்கள், ஸாத்யர்கள், விஶ்வேதேவதைகள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அசுரர்கள், சித்தர்கள், இவர்களெல்லாரும், ஆச்சர்யமடைந்து உன்னைப் பார்க்கிறார்கள். (உஉ)

𑌰𑍂𑌪𑌂 𑌮𑌹𑌤𑍍𑌤𑍇 𑌬𑌹𑍁𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂
𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌬𑌹𑍁𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌾𑌦𑌮𑍍।
𑌬𑌹𑍂𑌦𑌰𑌂 𑌬𑌹𑍁𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌂
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌹𑌮𑍍॥

ரூபம்மஹத்தேபஹுவக்த்ரநேத்ரம்மஹாபாஹோபஹுபாஹூருபாதம்,பஹூதரம்பஹுதம்ஷ்ட்ராகராளம்த்ருஷ்ட்வாலோகா: ப்ரவ்யதிதாஸ்ததாஹம். (உங)

ஓ மஹாபாஹோ! அநேகமுகங்கள், அநேக நேத்திரங்கள், அநேகஹஸ்தங்கள், அநேகம் தொடைகள், அநேகம் பாதங்கள், அநேகம்வயிறுகள் ஆகியஇவைகளையுடையதாய், அநேக தந்தங்களால் பயங்கரமாகிய உன்னுடையமஹாரூபத்தைப்பார்த்து, உலகத்தாரெல்லாரும் நானும் பயப்படுகிறோம். (உங)

𑌨𑌭𑌃𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌂
𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌵𑌿𑌶𑌾𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾
𑌧𑍃𑌤𑌿𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 𑌶𑌮𑌂 𑌚 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋॥

நபஸ்ப்ருசம்தீப்தமநேகவர்ணம்வ்யாத்தாநநம்தீப்தவிசாலநேத்ரம், த்ருஷ்ட்வாஹித்வாம்ப்ரவ்யதிதாந்தராத்மாத் ருதிம்நவிந்தாமி ஸமஞ்சவிஷ்ணோ. (உச)

ஓ ஜகத்வ்யாபி! ஆகாசத்தை யளாவி, ஜ்வலித்துக்கொண்டு, அநேக நிறங்களோடுகூடி வாயைத் திறந்துகொண்டு, விளங்குகின்ற நேத்திரங்களையுடையவனை வுன்னைப் பார்த்து, அஞ்சினமனத்தோடு கூடினவனை நான் தேஹதாரணத்தை யடையமாட்டாதவனும், இந்திரிய மனங்களுக்கு உபசாந்தி யில்லாதவனுமிருக்கிறேன். (உச)

𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 𑌚 𑌤𑍇 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍈𑌵 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌾𑌨𑌿।
𑌦𑌿𑌶𑍋 𑌨 𑌜𑌾𑌨𑍇 𑌨 𑌲𑌭𑍇 𑌚 𑌶𑌰𑍍𑌮
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸॥

தம்ஷ்ட்ராகராளாநிசதேசமுகாநி த்ருஷ்ட்வைவகாலாநலஸந்நிபாநி, திஶோநஜாநேநலபேசசர்ம ப்ரஸீததேவேஶஜகந்நிவாஸ. (உரு)

ஓ தேவதேவா! ஓ ஜகந்நிவாஸா! கோரதந்தங்களால் பயங்கரங்களாய், பிரளயகாலாக்கினிக்குநிகரான உன்முகங்களைப் பார்த்தவுடனே, திசைகளை யறியாமலிருக்கிறேன், சாந்தியை யடையாம லிருக்கிறேன், அனுக்கிரஹிக்கவேண்டும். (உரு)

𑌅𑌮𑍀𑌚𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯𑌪𑍁𑌤𑍍𑌰𑌾
𑌸𑌰𑍍𑌵𑍇𑌸𑌹𑍈𑌵𑌾 𑌵𑌨𑌿𑌪𑌾𑌲𑌸𑌙𑍍𑌘𑍈𑌃।
𑌭𑍀𑌷𑍍𑌮𑍋𑌦𑍍𑌰𑍋𑌣 𑌸𑍍𑌸𑍂𑌤𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍌
𑌸𑌹𑌾𑌸𑍍𑌮𑌦𑍀𑌯𑍈𑌰𑌪𑌿𑌯𑍋𑌧𑌮𑍁𑌖𑍍𑌯𑍈𑌃॥

அமீசத்வாம் த்ருதராஷ்ட்ரஸ்யபுத்ரா
ஸர்வேஸஹைவா வநிபாலஸங்கை:,
பீஷ்மோத்ரோண ஸ்ஸூதபுத்ரஸ்ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை:. (உசு)

அநேகமான ராஜாக்களோடுகூட இந்த திருதராஷ்ட்டிர புத்திரர்களெல்லாரும், பீஷ்மன், துரோணன், கர்ணன், இவர்கள் யாவரும் எம்மவர்களான பிரதான வீரரோடு சேர்ந்து.

𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌰𑌮𑌾𑌣𑌾 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿
𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 𑌭𑌯𑌾𑌨𑌕𑌾𑌨𑌿।
𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌲𑌗𑍍𑌨𑌾 𑌦𑌶𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍁
𑌸𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑍂𑌰𑍍𑌣𑌿𑌤𑍈𑌰𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌙𑍍𑌗𑍈𑌃॥

வக்த்ராணிதேத் வரமாணாவிஶந்தி
தம்ஷ்ட்ராகராளாநி பயாநகாநி,
கேசித்விலக்நா தசநாந்தரேஷு
ஸந்த்ருஶ்யந்தே சூர்ணிதைருத்தமாங்கைஃ. (௨௭)

கோரப்பற்களால் விகாரங்களாய் பயங்கரங்களான உன்முகங்களில், சிலர் விரைவாய் பிரவேசிக்கிறார்கள். சிலர் நொறுங்கின தலைகளுடன் பற்களின் சந்துகளில் ஒட்டிக் கொண்டவர்களாகக் காணப்படுகிறார்கள். (௨௭)

𑌯𑌥𑌾 𑌨𑌦𑍀𑌨𑌾𑌂 𑌬𑌹𑌵𑍋𑌮𑍍𑌬𑍁𑌵𑍇𑌗𑌾
𑌸𑍍𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑌾 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿।
𑌤𑌥𑌾 𑌤𑌵𑌾𑌮𑍀 𑌨𑌰𑌲𑍋𑌕𑌵𑍀𑌰𑌾
𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌭𑌿𑌵𑌿𑌜𑍍𑌵𑌲𑌨𑍍𑌤𑌿॥

யதாநதீநாம்பஹவோம்புவேகா ஸ்ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி,
ததாதவாமீநரலோகவீரா விஶந்திவக்த்ராண்யபிவிஜ்வலந்தி. (௨௮)

எப்படி அநேக நதி ஜலபிரவாகங்கள் சமுத்திரத்தைக் குறித்தேபோகின்றனவோ, அப்படியே இந்த ராஜவீரரெல்லாரும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற உன் முகங்களிலேயே பிரவேசிக்கிறார்கள். (௨௮)

𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌜𑍍𑌵𑌲𑌨𑌂 𑌪𑌤𑌙𑍍𑌗𑌾𑌃
𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌨𑌾𑌶𑌾𑌯 𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌵𑍇𑌗𑌾𑌃।

𑌤𑌥𑍈𑌵 𑌨𑌾𑌶𑌾𑌯 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿𑌲𑍋𑌕𑌾
𑌸𑍍𑌤𑌵𑌾𑌪𑌿𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌵𑍇𑌗𑌾𑌃॥

யதாப்ரதீப்தம்ஜ்வலநம்பதங்காꞏ விஶந்திநாசாயஸம்ருத்தவேகாꞏ,
ததைவநாசாயவிசந்திலோகாஸ்தவாபிவக்த்ராணிஸம்ருத்தவேகாꞏ.

எப்படி ஜ்வலித்துக்கொண்டிருக்கிற நெருப்பில் விட்டில்கள் தாம்நசிக்கும்பொருட்டு மிகவும் விரைகின்றனவோ அந்த பிரகாரமாகவே இந்த ராஜஸமூஹங்களும் ஸம்பூர்ண வேகத்தோடு தாம் நசிக்கும்பொருட்டு உன் முகத்தில் பிரவேசியாநின்றன. (௨௯)

𑌲𑍇𑌲𑌿𑌹𑍍𑌯𑌸𑍇 𑌗𑍍𑌰𑌸𑌮𑌾𑌨𑌃 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾
𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌸𑌮𑌗𑍍𑌰𑌾𑌨𑍍𑌵𑌦𑌨𑍈𑌰𑍍𑌜𑍍𑌵𑌲𑌦𑍍𑌭𑌿𑌃।

𑌤𑍇𑌜𑍋𑌭𑌿𑌰𑌾𑌪𑍂𑌰𑍍𑌯 𑌜𑌗𑌤𑍍𑌸𑌮𑌗𑍍𑌰𑌂
𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌵𑍋𑌗𑍍𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌪𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋॥

லேலிஹ்யஸேக்ரஸமாநஸ்ஸமந்தால் லோகாந்ஸமக்ராந்வதநைர்ஜ்வலத்பிஃ, தேஜோபிராபூர்யஜகத்ஸமக்ரம் பாஸஸ்தவோக்ராஃப்ரதபந்திவிஷ்ணோ. (௩௦)

விஷ்ணு! நான்கு பக்கங்களிலும் சமஸ்தமான ராஜஸமூகங்களை, ஜ்வலித்துக்கொண்டிருக்கிற முகங்களால் புசித்துக்கொண்டு உதட்டை நக்கிக்கொண்டிருக்கிறாய், உக்ரங்களான உன் கிரணங்கள் வெளிச்சத்தினால் சமஸ்தலோகங்களையும் வியாபித்து தபிக்கச்செய்யாநின்றன. (௩௦)

𑌆𑌖𑍍𑌯𑌾𑌹𑌿 𑌮𑍇 𑌕𑍋 𑌭𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌰𑍂𑌪𑍋
𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌵𑌰 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦।

𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌮𑌾𑌦𑍍𑌯𑌂
𑌨𑌹𑌿 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌤𑌵 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑍍॥

ஆக்யாஹிமேகோ பவாநுக்ரரூபோ நமோஸ்துதேதேவவரப்ரஸீத, விஞ்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம் நஹிப்ரஜாநாமிதவப்ரவ்ருத்திம். (௩௧)

இப்படிப்பட்ட உக்கிரரூபமான நீயார்? உன்னுடைய நிரங்குச ஐஶ்வர்யத்தைப்பார்க்கவிரும்பின எனக்கு நீ இப்படிப்பட்ட கோரரூபத்தைக் காட்டுவது யாதுக்கு எனக்குத் தெரிவிப்பாயாக, உனக்கு நமஸ்காரம், தேவேஶ்வரா! அநுக்கிரஹிப்பாயாக, ஆதிபுருஷனை உன்னைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நீ செய்யப்போகிற காரியம் எனக்குத் தெரியவில்லை. (௩௧)

## ஸ்ரீ கிருஷ்ண வாக்கியம்.




𑌕𑌾𑌲𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌲𑍋𑌕𑌕𑍍𑌷𑌯 𑌕𑍃𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍋
𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌸𑌮𑌾𑌹𑌰𑍍𑌤𑍁𑌮𑌿𑌹 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃
𑌋𑌤𑍇𑌽𑌪𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇
𑌯𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑍇𑌷𑍁 𑌯𑍋𑌧𑌾𑌃

காலோஸ்மிலோகக்ஷய க்ருத்ப்ரவ்ருத்தோ லோகாந்ஸமா ஹர்துமிஹப்ரவ்ருத்த:, ருதேபித்வாநபவிஷ்யந்திஸர்வே யேவஸ்திதா: ப்ரதயநீகேஷுயோதா:. (௩௨)

நான் இந்த ராஜஸமூஹங்களை நாசஞ்செய்வதற்கு விருத்தியடைந்துகொண்டிருக்கிற காலனாகிறேன். லோகங்களை சம்ஹரிப்பதற்குபிரவர்த்தித்திருக்கிறேன், உனக்குவிரோத

மாய் நிற்கிற யுத்த வீரரெல்லாரும் நீ சும்மா இருந்தாலும் பிழைக்கமாட்டார்கள். (௩௨)

தஸ்மாத்த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ
ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம்।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்॥

தஸ்மாத்வமுத்திஷ்ட யசோலபஸ்வ ஜித்வாசத்ரூன்புங்க்ஷ்வ ராஜ்யம்ஸம்ருத்தம், மயைவைதே நிஹதா:பூர்வமேவ நிமித்தமாத்ரம் பவஸவ்யஸாசிந். (௩௩)

ஆகையால், நீ எழுந்திரு, பகைவரைக் கொன்று கீர்த்தியை யடைவாயாக, பூர்ணமான ராஜ்யத்தை அநுபவிப்பாயாக, இவர்களெல்லாரும் முன்னே என்னால் கொல்லப்

பட்டார்கள். ஓ அர்ஜுனா! நீ காரணமாத்திரமா யிருக்கக் கடவாய். (௩௩)

𑌦𑍍𑌰𑍋𑌣𑌂𑌚 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂𑌚 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌂𑌚
𑌕𑌰𑍍𑌣𑌂 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌯𑍋𑌧𑌵𑍀𑌰𑌾𑌨𑍍।
𑌮𑌯𑌾 𑌹𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌜𑌹𑌿𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃
𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵𑌜𑍇𑌤𑌾𑌸𑌿 𑌰𑌣𑍇𑌸𑌪𑌤𑍍𑌨𑌾𑌨𑍍॥

த்ரோணஞ்சபீஷ்மஞ்ச ஜயத்ரதஞ்ச கர்ணந்ததாந்யாநபியோத வீராந், மயாஹதாம்ஸ்த்வஞ்ஜஹிமாவ்யதிஷ்டாயுத்யஸ்வஜேதாஸிர ணேஸபத்நாந். (௩௪)

துரோணனையும், பீஷ்மனையும், ஜயத்ரதனையும், கர்ணனையும், மற்றுமுள்ள யுத்தவீரரெல்லாரையும், என்னால் கொல்லப்பட்டவர்களை நீகொல்லக்கடவாய், துக்கிக்கவேண்

டாம். யுத்தம் செய்வாயாக, யுத்தத்தில் பகைவரைவெல்லு வாய். (௩௪)

ஸஞ்சய வாக்கியம்.

𑌏𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌵𑌚𑌨𑌂 𑌕𑍇𑌶𑌵𑌸𑍍𑌯
𑌕𑍃𑌤𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌰𑍍𑌵𑍇𑌪𑌮𑌾𑌨𑌃 𑌕𑌿𑌰𑍀𑌟𑍀।
𑌨𑌮𑌸𑍍𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌹 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂
𑌸𑌗𑌦𑍍𑌗𑌦𑌂 𑌭𑍀𑌤𑌭𑍀𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯॥

ஏதத்ச்ருத்வாவசநங்கேசவஸ்ய க்ருதாஞ்ஜ்லிர்வேபமாநஃகிரீட,
நமஸ்க்ருத்வாபூயஏவாஹக்ருஷ்ணம் ஸகத்கதம்பீதபீதஃப்ரணம்ய.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய இந்த மொழிகளைக் கேட்டு, அஞ்சலிசெய்துகொண்டு, நடுக்கத்தோடும்அர்ஜுனன் நமஸ்கரித்து மிகவும் பயந்தவனாய், மறுபடியும்நமஸ்கரித்து

ஹீநஸ்வரத்தோடு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை நோக்கி இப்படி சொன்னான். (௩௫)

அர்ஜ்ஜுன வாக்கியம்.

𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌤𑌵 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌾
𑌜𑌗𑌤𑍍𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍁𑌰𑌜𑍍𑌯𑌤𑍇 𑌚 ।
𑌰𑌕𑍍𑌷𑌾𑌂𑌸𑌿 𑌭𑍀𑌤𑌾𑌨𑌿 𑌦𑌿𑌶𑍋 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃 ॥

:ஸ்தாநேஹ்ருஷீகேசதவப்ரகீர்த்யாத்ஜகத்ப்ரஹ்ருஷ்யயநுரஜ்ய தேச, ரக்ஷாம்ஸிபீதாநிதிசோத்ரவந்தி ஸர்வேநமஸ்யந்திசஸித்தஸங்காஃ. (௩௬)

ஓ ருஷிகேசா! உன் கீர்த்தியால் ஜகத்தானது சந்தோஷிக்கின்றது, உன்னிடத்தில் அன்புள்ளதாயிருக்கின்

ற து. ராக்ஷஸர்கள் பயந்து திசைகளை நோக்கி யோடுகி ருர்கள், சித்தவித்யாதராதிதேவர்கள் எல்லாரும்கூடி நமஸ் கரிக்கிருர்கள். (மேலோர்க்கும் மேலானவனுய் பிரம்மா வுக்கும் ஆதிகர்த்தாவாகிய உன்னை ஏன் நமஸ்கரிக்கமாட் டார்கள் ஆகையால்) இதுயுக்தம். (௩௬)

𑌕𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌤𑍇 𑌨 𑌨𑌮𑍇𑌰𑌨𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍
𑌗𑌰𑍀𑌯𑌸𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌪𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑍇।
𑌅𑌨𑌨𑍍𑌤 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸
𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌸𑌦𑌸𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌯𑌤𑍍॥

*கஸ்மாச்சதேநநமேரந்மஹாத்மந் கரீயஸேப்ரம்ஹணேப்யாதிகர்த்ரே, அநந்ததேவேஶஜகந்நிவாஸ த்வமக்ஷரம்ஸதஸத்தத்பரம்யத்.*

ஓ மஹாத்மா! (கல்யாணகுணங்களால்) மிகவும் பெரியவனாய், பிரம்மதேவனுக்கும் ஆதிகர்த்தாவாகிய உனக்கு பிரம்மாதி தேவதைகள் ஏன் நமஸ்காரம் செய்யமாட்டார்கள். ஓ அநந்தா! தேவதேவா! ஓ ஜகந்நிவாஸா! அக்ஷரம் என்று சொல்லப்படுகிறஜீவாத்மதத்வம்நீயே, கார்யகாரணரூபமானபிரகிருதிதத்வம்நீயே, இவ்விரண்டைப்பார்க்கிலும் வேறான பிரகிருதி சம்பந்தமில்லாத ஆத்மதத்வம் நீயே. ()

கூஈோஷிெஉவஃ உ-ஈ ஈஷஃவ-ஈ ாண
ஷஃஸொ௱விஸ்ரெவு உ௱ஂநியா நஃ|
வெ-தூாவிவெஉ௱ஂஉ உ௱ஂஉயா ஃ
கூயா-த-தஂவிஸ் ஃ நஞா-ஞவ॥

த்வமாதிதேவ:புருஷ:புராண ஸத்வமஸ்யவிஶ்வஸ்யபரந்நிதாநம்,
வேத்தாஸிவேத்யஞ்சபரஞ்சதாம த்வயாததம்விச்வமநந்தரூப. ()

நீயே ஆதிதேவன், நீயேபுராணபுருஷன், இந்தலோகங்களுக்கெல்லாம் நீயே முக்கியாதாரம், நீயேவேத்தா, நீயே வேத்யம், நீயேபரமப்பிராப்யம் ஓ அநந்தரூபா! இந்தஜகம் முழுதும் உன்னால் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. (௩௮)

𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌯𑌮𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑍍 𑌵𑌰𑍁𑌣𑌶𑍍𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌃
𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌶𑍍𑌚।
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇𑌽𑌸𑍍𑌤𑍁 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌵𑌃
𑌪𑍁𑌨𑌶𑍍𑌚 𑌭𑍂𑌯𑍋𑌽𑌪𑌿 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇॥

வாயுர்யமோக்நிர்வருணஶ்ஶஶாங்கஃப்ரஜாபதிஸ்த்வம்ப்ரபிதாமஹச்ச நமோநமஸ்தேஸ்துஸஹஸ்ரக்ருத்வஃ புநஶ்சபூயோபிநமோநமஸ்தே.

நீயேகாற்று, நீயேயமன், நீயேஅக்கினி, நீயேவருணன், நீயே சந்திரன், நீயே பிதாமகன் (பிரம்மா,) நீயே பிதாமக

னுக்குத் தகப்பன், உனக்கு ஆயிரம் நமஸ்காரம், மறுபடியும் மறுபடியும் உனக்கு நமஸ்காரம். (௩௯)

𑌨𑌮𑌃 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑌥 𑌪𑍃𑌷𑍍𑌠𑌤𑌸𑍍𑌤𑍇
𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵 ।
𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌂
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌷𑌿 𑌤𑌤𑍋𑌽𑌸𑌿 𑌸𑌰𑍍𑌵𑌃 ॥

நம:புரஸ்தாததப்ருஷ்டதத்வே நமோஸ்துதேஸர்வதஏவஸர்வ,
அநந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வ ஸர்வம்ஸமாப்நோஷி ததோஸிஸர்வ:.

ஓ ஸர்வரூபி! உனக்கு எதிரில் நமஸ்காரம், பின்புறத்தில் நமஸ்காரம், எல்லாத்திசைகளிலும் நமஸ்காரம். ஓ அநந்தசக்தியுள்ளவனே! நீ அபரிமிதமான பராக்கிரமம் உள்ள

வன், நீ எல்லாவஸ்துக்களிலும் வியாபித்திருக்கிறாய். ஆகையால் எல்லாம் ஆகிறாய். (௪௦)

𑌸𑌖𑍇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌸𑌭𑌂 𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂
𑌹𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌹𑍇 𑌯𑌾𑌦𑌵 𑌹𑍇 𑌸𑌖𑍇𑌤𑌿 ।
𑌅𑌜𑌾𑌨𑌤𑌾 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌂 𑌤𑌵𑍇𑌦𑌂
𑌮𑌯𑌾 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌣𑌯𑍇𑌨 𑌵𑌾𑌪𑌿 ॥

ஸகேதிமத்வாப்ரஸபம்யதுக்தம் ஹேக்ருஷ்ணஹேயாதவஹே ஸகேதி, அஜாநதாமஹிமாநந்தவேதம் மயாப்ரமாதாத்ப்ரணயேந வாபி. (௪௧)

உனது இப்படிப்பட்ட மகிமையை யறியாமல் மோகத்தாலாயினும், நெடுங்காலப் பழக்கத்தாலாயினும், தோழனென்றெண்ணி, விநயமில்லாமல், ஓ கிருஷ்ணா! ஓ யாதவா! ஓ தோழனே! என்று அழைத்ததும். (௪௧)

𑌯𑌚𑍍𑌚𑌾𑌵𑌹𑌾𑌸𑌾𑌰𑍍𑌥𑌮𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑍋𑌽𑌸𑌿
𑌵𑌿𑌹𑌾𑌰𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑌭𑍋𑌜𑌨𑍇𑌷𑍁।
𑌏𑌕𑍋𑌽𑌥𑌵𑌾𑌪𑍍𑌯𑌚𑍍𑌯𑍁𑌤 𑌤𑌤𑍍𑌸𑌮𑌕𑍍𑌷𑌂
𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌾𑌮𑌯𑍇 𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑍍॥

யச்சாபஹாஸார்த்தமஸத்க்ருதோஸி விஹாரசய்யாஸநபோஜநேஷு, ஏகோதவாப்யச்யுதஸத்ஸமக்ஷம் தத்க்ஷாமயேத்வாமஹமப்ரமேயம். (௪௨)

அச்சுதனே! பரிகாஸார்த்தமாக விளையாடும்போதும், சயனகாலத்திலும், உட்கார்ந்திருக்கும்போதும், போஜனகாலத்திலும், ஏகாந்தத்திலும், ஜனங்களுக்கெதிரிலாலும் மரியாதையில்லாத சொற்களைச் சொல்லியிருக்கிறேன். அவற்றை அப்ரமேயனான நீ க்ஷமிக்கவேண்டுமென்று நான் பிரார்த்திக்கிறேன். (௪௨)

𑌪𑌿𑌤𑌾𑌸𑌿𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯
𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌪𑍂𑌜𑍍𑌯𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍।
𑌨𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑍋𑌸𑍍𑌤𑍍𑌯 𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃𑌕𑍁𑌤𑍋𑌨𑍍𑌯𑍋
𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇 𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵॥

*பிதாஸிலோகஸ்யசராசரஸ்ய த்வமஸ்யபூஜ்யஶ்சகுருர்கரீயாந், நத்வத்ஸமோஸ்த்யப்யதிக:குதோந்யோ லோகத்ரயேப்யப்ரதிமப்ரபாவ.* (சங)

ஒப்பில்லாத பெருமையுள்ளவனே! நீ ஜங்கமஸ்தாவர ரூபமான இந்த பிரபஞ்சத்துக்குத் தகப்பன், எல்லாராலும் பூஜிக்கப்படுகிறவன், குரு, ஆகையால், எல்லாவற்றுக்கும் மேலானவன், உனக்கு நிகரானவனும் இல்லை, உன்னைப் பார்க்கிலும் சிறந்தவன் மூன்றுலகங்களிலும் வேறு எவனிருக்கிறான். (சங)

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌯𑌕𑌾𑌯𑌂
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑍇𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌮𑍀𑌶𑌮𑍀𑌡𑍍𑌯𑌮𑍍।
𑌪𑌿𑌤𑍇𑌵 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑌖𑍇𑌵 𑌸𑌖𑍍𑌯𑍁𑌃
𑌪𑍍𑌰𑌿𑌯𑌃𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 𑌦𑍇𑌵 𑌸𑍋𑌢𑍁𑌮𑍍॥

தஸ்மாத்ப்ரணம்ய ப்ரணிதாயகாயம் ப்ரஸாதயேத்வா மஹமீசமீட்யம், பிதவேபுத்ரஸ்யஸகேவஸக்யு: ப்ரியஃப்ரியாயார்ஹஸிதேவ ஸோடும். (சச)

ஆகையால், நமஸ்கரித்து, சரீரத்தை வளைத்து, ஈஸ்வரனுப் ஸ்தோத்ரார்ஹனுன உன்னை பிரார்த்திக்கிறேன். தேவா! புத்திரனிடத்தில் தகப்பன் எப்படியோ, தோழனிடத்தில் தோழன் எப்படியோ, அப்படியே உனக்குப் பிரியனுன என்பொருட்டு எனக்குப் பிரியனுன நீ எல்லாவற்றையும் க்ஷமிப்பதற்குத் தகுந்தவனுகிறுய். (சச)

𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌹𑍃𑌷𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾
𑌭𑌯𑍇𑌨 𑌚 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑍋 𑌮𑍇।
𑌤𑌦𑍇𑌵 𑌮𑍇 𑌦𑌰𑍍𑌶𑌯 𑌦𑍇𑌵 𑌰𑍂𑌪𑌂
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸॥

அத்ருஷ்டபூர்வம்ஹ்ருஷிதோஸ்மித்ருஷ்ட்வாபயேநசப்ரவ்யதி தம்மநோமே, ததேவமேதர்சயதேவரூபம் ப்ரஸீததேவேஶஜகந்நி வாஸ. (சரு)

இதுவரைக்கும் பார்க்காத உனது உக்கிர ரூபத்தைப் பார்த்து சந்தோஷமடைந்தேன். ஆனல் என் மனமானது பயத்தினல் பீடிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால், தேவா! முன்னேய ரூபத்தையே எனக்குக்காட்டுவாயாக. ஓ தேவேஶ்வரா! ஜகந்நிவாஸா! என்னை அநுக்கிரகிக்கவேண்டும். ()

𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤
𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌹𑌂 𑌤𑌥𑍈𑌵।
𑌤𑍇𑌨𑍈𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑍇𑌨
𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌾𑌹𑍋 𑌭𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍇॥

கிரீடநங்கதிநஞ்சக்ரஹஸ்தமிச்சாமித்வாந்த்ருஷ்டுமஹந்ததைவ,
தேநைவ ரூபேணசதுர்புஜேந ஸஹஸ்ரபாஹோபவவிஶ்வமூர்த்தே.

ஓ ஸஹஸ்ரபாஹோ! ஓ விஶ்வரூபா! கிரீடத்தோடும், கதையோடும், சக்கரக்கையோடும் கூடினவனுகிய உன்னை அந்தரூபத்தோடே பார்க்கவிரும்புகிறேன், நான்கு புஜங்களுள்ள அந்தத் திருமேனியோடு கூடியிருக்கக்கடவாய். ()

ஸ்ரீ கிருஷ்ண வாக்கியம்.

𑌮𑌯𑌾 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍇𑌨 𑌤𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌦𑌂
𑌰𑍂𑌪𑌂 𑌪𑌰𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌤𑍍।
𑌤𑍇𑌜𑍋𑌮𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌨𑌨𑍍𑌤𑌮𑌾𑌦𑍍𑌯𑌂
𑌯𑌨𑍍𑌮𑍇 𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌯𑍇𑌨 𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍॥

மயாப்ரஸந்நேநதவார்ஜுனேதம் ரூபம்பரந்தர்சிதமாத்மயோகாத், தேஜோமயம்விச்வமநந்தமாத்யம் யந்மேத்வதந்யேநநத்ருஷ்டபூர்வம். (௪௭)

அர்ஜுனு! நீ யல்லது பிறர்முன்னே பார்க்காத தேஜோமயமாய், முடிவில்லாததாய், முதலுமான சிறந்த இந்தவிச்வரூபம் உன்மீதுள்ள கருணையினுலேயே என் சங்கல்பத்தால் உனக்கு என்னுல் காட்டப்பட்டது. (௪௭)

𑌨𑌵𑍇𑌦𑌯𑌜𑍍𑌞𑌾 𑌧𑍍𑌯𑌯𑌨𑍈𑌰𑍍𑌨𑌦𑌾𑌨𑍈
𑌰𑍍𑌨𑌚𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌭𑌿𑌰𑍍 𑌨𑌤𑌪𑍋𑌭𑌿𑌰𑍁𑌗𑍍𑌰𑍈𑌃।
𑌏𑌵𑌂𑌰𑍂𑌪𑌃 𑌶𑌕𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌨𑍃𑌲𑍋𑌕𑍇
𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌯𑍇𑌨 𑌕𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌵𑍀𑌰॥

நவேதயக்ஞாத்யயனைர்நதானைர் நசக்ரியாபிர்நதபோபிருக்ரைஃ,
ஏவம்ரூபஃஶக்ய அஹந்ருலோகே த்ரஷ்டுந்த்வதந்யேநகுருப்ரவீர.

குருஶ்ரேஷ்டா! வேதங்களாகிலும், யஜ்ஞங்களாலாகிலும், அத்யயநங்களாலாகிலும், தானங்களாலாகிலும், கிரியைகளாலாகிலும், உக்கிரமான தவங்களாலாகிலும், உன்னையன்றி மற்ற யாருக்கும் மனுஷ்ய சரீரத்தோடிருந்து இந்த ரூபத்தோடு கூடியிருக்கிற என்னைப் பார்ப்பதற்கு சாத்தியப்படாது. (௪௮)

𑌮𑌾 𑌤𑍇 𑌵𑍍𑌯𑌥𑌾 𑌮𑌾 𑌚 𑌵𑌿𑌮𑍂𑌢𑌭𑌾𑌵𑍋
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌰𑍂𑌪𑌂 𑌘𑍋𑌰𑌮𑍀𑌦𑍃𑌙𑍍𑌮𑌮𑍇𑌦𑌮𑍍।
𑌵𑍍𑌯𑌪𑍇𑌤𑌭𑍀𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌮𑌨𑌾𑌃 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂
𑌤𑌦𑍇𑌵 𑌮𑍇 𑌰𑍂𑌪𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯॥

மாதேவ்யதாமாசவிமூடபாவோ த்ருஷ்ட்வாரூபம் கோரமீத்ருங்மமேதம், வ்யபேதபீ:ப்ரீதமனா:புநஸ்த்வம் ததேவமேரூபமிதம் ப்ரபஶ்ய. (௪௯)

இப்படிப்பட்ட என்னுடைய கோரரூபத்தைப்பார்த்து உனக்கு பயமாகிலும், மோஹமாகிலும் உண்டாகக்கூடாது. நிர்ப்பயனாய், சந்தோஷத்தோடு கூடின மனத்துடன் எனது முன்னைய ரூபத்தையே நீ இப்பொழுது பார்ப்பாயாக. (௪௯)

ஸஞ்சய வாக்கியம்.

𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌜𑌨𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑌦𑍇𑌵𑌸𑍍𑌤𑌥𑍋𑌕𑍍𑌤𑍍𑌵𑌾
𑌸𑍍𑌵𑌕𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌭𑍂𑌯𑌃।
𑌆𑌶𑍍𑌵𑌾𑌸𑌯𑌾𑌮𑌾𑌸 𑌚 𑌭𑍀𑌤𑌮𑍇𑌨𑌂
𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌵𑌪𑍁𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾॥

இத்யர்ஜுநம்வாஸுதேவஸ்ததோக்த்வா ஸ்வகம்ரூபம்தர்ஶயாமாஸபூயஃ, ஆஶ்வாஸயாமாஸசபீதமேநம்பூத்வாபுநஸ்ஸௌம்யவபுர்மஹாத்மா. (௫௦)

வாசுதேவர், இப்படி அர்ஜுனனைக் குறித்துச்சொல்லி மறுபடியும் தன் ஸ்வரூபத்தைக்காட்டினார். அந்த மஹாத்துமா மறுபடியும் சாந்தரூபனாய், பயமடைந்திருந்த அர்ஜுனனைத் தணித்தார். (௫௦)

அர்ஜ்ஜுன வாக்கியம்.

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌦𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌤𑌵𑌸𑍌𑌮𑍍𑌯𑌂𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨।
𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑌸𑍍𑌮𑌿𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 𑌸𑌚𑍇𑌤𑌾𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂𑌗𑌤𑌃॥

த்ருஷ்ட்வேதம்மாநுஷம்ரூபம் தவஸௌம்யம்ஜநார்தந,
இதாநீமஸ்மிஸம்வ்ருத்தஃ ஸசேதாஃப்ரக்ருதிங்கதஃ. (ருக)

ஜனார்த்தனா! உன்னுடைய சாந்தமான இந்த மாநுஷ ரூபத்தைப்பார்த்து, இப்பொழுது நான் மனமுள்ளவனாய் ஸ்வபாவத்தை யடைந்தவனாயிருக்கிறேன். (ருக)

ஸ்ரீ கிருஷ்ண வாக்கியம்.

𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌮𑌿𑌦𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌯𑌨𑍍𑌮𑌮।
𑌦𑍇𑌵𑌾 𑌅𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌃॥

ஸுதுர்தர்ஶமிதம்ரூபம் த்ருஷ்டவாநஸியந்மம,
தேவாஅப்யஸ்யரூபஸ்ய நித்யம்தர்ஶனகாங்க்ஷிண꞉. (ருஉ)

நீ பார்த்த என் ரூபம் தரிசிப்பதற்கு மிகவும் அஸாத்யம், தேவதைகளும் இந்த ரூபத்தைப்பார்ப்பதற்கு நித்யம் விரும்புகிறார்கள் (ஆனாலும் பார்த்தவர்களல்ல.) (ருஉ)

𑌨𑌾𑌹𑌂 𑌵𑍇𑌦𑍈𑌰𑍍𑌨 𑌤𑌪𑌸𑌾 𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌨 𑌚𑍇𑌜𑍍𑌯𑌯𑌾।
𑌶𑌕𑍍𑌯 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑍋 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌮𑌾𑌂 𑌯𑌥𑌾॥

நாஹம்வேதைர்நதபஸாந தாநேநநசேஜ்யயா,
சக்யஏவம்விதோத்ருஷ்டும் த்ருஷ்டவாநஸிமாம்யதா. (ருங)

வேதங்களாலாகிலும், தவத்தினாலாகிலும், தானத்தினாலாகிலும், யாகத்தினாலாகிலும், எனது யதார்த்த ஸ்வரூபம்

நீ இப்பொழுது பார்த்ததுபோலப் பார்ப்பதற்கு சாத்திய மாகாது. (௫௩)

𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌶𑌕𑍍𑌯 𑌅𑌹𑌮𑍇𑌵𑌂𑌵𑌿𑌧𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥

பக்த்யாத்வநந்யயாசக்ய அஹமேவம்விதோர்ஜுந,
ஜ்ஞாதுந்த்ருஷ்டுஞ்சதத்தேவந ப்ரவேஷ்டுஞ்சபரந்தப. (௫௪)

அர்ஜுனா! ஓ பரந்தபா! அநந்யபக்தியினாலேயே, எனது இந்தரூபத்தை யதார்த்தமாய் தெரிந்துகொள்வதற்கும் தரிசிப்பதற்கும், பூர்ணமாக அனுபவிப்பதற்கும், சாத்திய மாகும். (௫௪)

𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌨𑍍𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸𑌙𑍍𑌗𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑌃 𑌸 𑌮𑌾𑌮𑍇𑌤𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ॥

